தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் காலாண்டு இதழ்
இதழ் 2 ஆனந்த ஆண்டு ஆடித் திங்கள் விலை ரூ



## அட்டை படத்தின் விளக்கம்

தஞ்சை மாவட்டத்தில் திருப்பனந்தாள் அருகே இரைவோகி என்னும் ஊர் உள்ளது. அங்கே கோயிலில் இவ்வழகியச் சிற்பம் காணப்படுகிறது. முருகப் பெருமான் தெய்வானையுடன் நிற்கும் கோலம். காலின் ஒரு புறத்தே மயிலைக் காணலாம். இது தமிழ்நாட்டுச் சிற்பம் அல்ல. நுளம்ப மேலைச் சாளுக்கியக் கலை. சோழ மன்னர்கள் நுளம்பபாடி, கலியாணி முதலிய இடங்களைக் கைப்பற்றிய போது அங்கிருந்து பல அழகிய கலைப் பொருள்களில் ஈடுபட்டு வெற்றிச் சின்னங் களாகக் கொண்டு வந்துள்ளனர். அவற்றில் ஒன்று இவ்வழகிய சிற்பம். இதை திருப்பனந்தாள் வெ. மகாதேவன் இத்துறையின் கவனத்துக்கு கொண்டு வந்தார்.



தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைக்காக ஷ துறையின் அச்சகத்தில் இத்துறையின் இயக்குநர்
வெளியிடப்பெற்றது ஆசிரியர்: இயக்குநர் இரா. நாகசாமி

அட்டையில் . . . . . . . . .

திருமகள், பாண்டியர் காலம், கி. பி. 8-ஆம் நூற்றுண்டு திருச்சுழி, ராமநாதபுரம் மாவட்டம்

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைக்காக [illegible] துறையின் அச்சகத்தில் இத்துறை[illegible]ன் இயக்குநரால் அச்சி[illegible] இரா[illegible] வெளியிடப்பெற்றது ஆசிரியர் இயக்குநர் இரா. நாகசாமி.

# ஒரு கல்லில் இரு செய்திகள்

க. குழந்தைவேலன் M. A., Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை.

கல்வெட்டுக்களில் பெரும்பாலும் அரசனது ஆட்சி ஆண்டு, கலியாண்டு, சகரயாண்டு, தமிழ் ஆண்டு ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்று குறிப்பிடப்பட்டிருக்கும். சிலவற்றில் கலியாண்டோடு தமிழ் ஆண்டின் பெயரும் சேர்த்துக் குறிப்பிடப் படுவதும் உண்டு. ஆயின், மேற்குறிப்பிட்ட ஆண்டுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆண்டுகள் சேர்த்துக் குறிப்பிடப்படுவது அரிது. அந்த அரிய கல்வெட்டுக்களில் ஒன்று தான் தமிழக அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை கண்டு பிடித்த முத்தானூர் நடுகற் கல்வெட்டு.

அண்மையில் தருமபுரி மாவட்டம் அரூர் வட்டத்தில் கல்வெட்டு ஆய்வு செய்த பொழுது அரூரில் இருந்து தீர்த்தமலை செல்லும் வழியில் தீர்த்தமலைக்கு முன்னல் சுமார் இரண்டு கி. மீ, தொலைவில் உள்ள முத்தானூரைச் சார்ந்த பொன்னேரிக் கரையில் இக்கல்வெட்டு கிடைத்துள்ளது. இதில் இரண்டு குறிப்பிடத்தக்க சிறப்புக்கள் உள்ளன. 1. சகர யாண்டோடு அரசனது ஆட்சி ஆண்டும் குறிக்கப் பட்டுள்ளது 2. கொங்கு நாட்டில் பெரும்பான்மையாக வாழும் வேளாளக் கவுண்டர்களுடைய உட்குலம் பற்றிய குறிப்பு. இதனுல் இஃது ஓர் அரிய கல் வெட்டாகத் திகழ்கிறது.

இக்கல்வெட்டின் தொடக்கத்தில் சகர யாண்டாகிய 847-ஆவது ஆண்டும், அதற்கடுத்து அப்பகுதியை ஆண்ட மன்னனுகிய வீர நுளம்பனுடைய பெயரும், அவனது ஆட்சியாண்டும் வரன் முறையாகக் குறிக்கப்பட்டுள்ளன.

ஸ்வஸ்தி ஸ்ரீ சகரையாண் டெண்ணூற்று நாற்பத்தேழாவது அண்ணயன் வீர நுளம்பனுக் காண்டிரண்டாவது வல்லவரையர் நாட்டில் . . .

இதனுல் வரலாற்றில் எவ்விதக் குழப்பமுமின்றி அரசன் ஆட்சிக் காலம், வரலாற்று ஆண்டு, குறிப்பிட்ட போர் நடந்த காலம் ஆகியவற்றைத் தெ[illegible] தெளிவாக அறிய முடிகின்றது.

மேற்குறிப்பிட்ட வீர நுளம்பனுடைய இரண்டாவது ஆட்சி ஆண்டில் அதாவது கி. பி. 905-இல் பவான்னையூர் காமுண்டர் மணியர் மணியமனுர் என்பவர் அரசனுக்காக ஆநிரைகளைக் கவரச் சென்ற பொழுது அதில் இறந்து பட்டார். அவர் நினைவாக இந்நடுகல் எடுக்கப்பட்டுள்ளது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ சகரை யாண்டு எண்ணூற்று நாற்ப[illegible]ழாவது அண்ணை யன் வீர நுளம்பனுக்கு ஆண்டு இரண்டாவது வல்லவரையர் நாட்டில் தொறுக் கொள்ள பவான்னையூர் காமுண்டர் மணியர் மணியமனுர் [illegible] மீட்டுப் பட்டார்"

இதன் கருச் செய்தியோடு, மேற் கொண்டு அக்கால மக்கட் குடிப்பிரிவையும் அதன் உட்குலப்பிரிவையும் (கிளைகள்) குறிப்பதைக் காணலாம். 'காமுண்டர் மணியர் மணியமன்ஞர்'' என்பது இறந்தவனுடைய குடிப்பெயராய ''காமுண்டர்'[1] என்பதையும், அதன் உட்குலமாகிய ''மணியர்'' என்பதையும் குறிக்கிறது.

பொதுவாகக் கொங்கு நாடாகிய சேலம், கோவை, தருமபுரி மாவட்டங்களில் வேளாளக் கவுண்டர்கள் அதிகமாக இன்று வாழ்கின்றனர். இன்று மட்டும் அன்று; பண்டைக் காலத்தும் இவர்கள் அங்கு வாழ்ந்துள்ளனர். இதற்குச் சான்ருக இப்பகுதிகளில் கிடைத்த கல்வெட்டுகளில் காமுண்டர், கவுண்டர் என்ற குடிப் பெயர்கள் அதிகமாகக் கிடைத்துள்ளன.

கி.பி. 8-ஆம் நூற்ருண்டில் தமிழகத்தின் வடபகுதியை ஆட்சி புரிந்த இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவனுடைய நடுகற் கல்வெட்டில் குமார மங்கல (க)வுண்டன், என்ற ஒருவன் குறிக்கப்பட்டுள்ளதும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. இதுவே கவுண்டர் என்ற குடிப்பெயரைக் கூறும் தொன்மையான கல்வெட்டு எனலாம். இதனுடைய சம காலத்தும், இதற்கடுத்து வரும் நூற்ருண்டுகளிலும் காமுண்டர், கவுண்டர் என்ற சொற்கள் பரவலாக வழங்கி வந்துள்ளன. எடுத்துக் காட்டாக

1. இராசேந்திர சோழ காமுண்டன்—85/1973*

2. கவுண்டர் செம்பா வையிராண்டை மாரப்பன்—88/1973

3. குச்சிக் காமிண்டன் தோநப்பன்—93/1973

போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

மாரப்பன், செம்பான் போன்ற பெயர்கள் இன்றும் கொங்கு வேளாளரிடத்து பெரு வழக்கான பெயர்களாக வழங்கி வருகின்றன. தோநப்பன் என்ற பெயர் தருமபுரி மாவட்டத்தில் பெரு வழக்கில் உள்ளது.

கொங்கு வேளாளக் குடியினர் தங்களுக்குள் கொள்வினை, கொடுப்பினைக்காக பல உட்குலங்களைப் (கூட்டம் அல்லது கிளை) பிரித்து அவற்றிற்குத் தங்களது உழவுத் தொழிலோடு தொடர்புடைய பறவைகள், பயிர் வகைகள், மணி (தவசம்) வகைகளால் காடை, செம்போத்து, பயிரன், மணியன், வாகன், கூரை போன்ற பெயர்களை வைத்துக் கொண்டுள்ளமை இன்றும் வழக்கில் அறியலாம் இவ்வுட் குலங்களை கூட்டம் அல்லது குலம் என அழைத்தல் மரபு. ஒவ்வொரு கூட்டம் அல்லது குலத்தினரும் தங்களைப் பங்காளிகள் எனக் கூறிக் கொள்வர். என்ன நேர்ந்தாலும் தங்களுக்குள் மண உறவு கொள்ளார். பிற குலங்களில் இருந்தே மண உறவு கொள்வர்.

இந்தக் குலப்பிரிவுகளை அவர்களுடைய நாட்டுப் பாடல்கள், திருமண வாழ்த்துப் பாடல்கள் ஆகியவற்றில் காண்பதோடு கோவை மாவட்டம் தாரா புரம் வட்டம் வள்ளி எரிச்சல் என்ற ஊரிலுள்ள மாந்தாளீச்வரம் கோயில் மண்டபத்தூண் கல்வெட்டுக்களாலும் அறிய முடிகின்றது.

---

1 செங்கம் நடு கற்கள் 1971/31 - தமிழ் நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை.

* தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டு எண்கள்

## வரகுணன் கோவை

மண்டலம் பண்டுண்ட திண்டோள் வரகுணன் தொண்டியின்வாய்க்
கண்டலம் தண்டுறைக் கண்டநொன் றுண்டு கனமகரக்
குண்டலம் கெண்டையி ரண்டொடு தொண்டையும் கொண்டோர் திங்கள்
மண்டலம் வண்டலம்பக் கொண்டல் தாழ வருகின்றதே.

—யா. கா. 41. மேற்.

யாப்பருங்கலக் காரிகையில் மேற்கோளாக எடுத்தாளப்படும் இப் பாடல், பாண்டியன் வரகுணனின் சிறப்பை முன்னிறுத்தி, அகத்துறைப் பாடலாக அமைந்துள்ளது. இப்பாடலை நோக்கும்போது வரகுணன் மேல் பாடப்பட்ட ஒரு கோவையிலிருந்து எடுக்கப்பட்டதோ என்று ஐயம் தோன்றுகிறது.

தமிழக வரலாற்றில் பாண்டியர் இருவர் வரகுணர் என்ற பட்டம் கொண்டிருந்தனர். அவர்களில் முதல் வரகுணன் பராந்தக நெடுஞ்சடையன் ஆவான். இரண்டாம் வரகுணன் மணிவாசகப் பெருமானின் சமகாலத்தவன் என்று கருதப்படுபவன். இக்கோவை இவர்களுள் யார்மீது பாடப்பட்டதோ அறிந்திலோம். முதல் வரகுணனுக்கும் முன்னர் ஆண்ட அரிகேசரி பராங்குச மாறவர்மன் மீது பாடப்பட்ட பாண்டிக்கோவையே கிடைத்துள்ள கோவைகளில் தொன்மையானது. இரண்டாம் வரகுணனின் சமகாலத்து மணிவாசகரால் பாடப்பட்ட திருக்கோவையார் நயம் மிகுந்தது. இவற்றிற்கு இடைப்பட்ட காலத்தில் கோவை இலக்கியம் செல்வாக்குப் பெற்றுச் சிறப்படையத் தொடங்கி இருக்க வேண்டும். மறைந்துபோன 'வரகுணன் கோவை' பல அரிய வரலாற்றுச் செய்திகளைக் கொண்டிருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

---

### பெண் துறவிகட்கு ஆண் மாணுக்கர்கள்

திருநெல்வேலி மாவட்டம் கழுகுமலை சிறந்த சமணத் தலமாகத் திகழ்ந்தது. அங்கு பல சமணப் பெரியார்களும் பெண் துறவிகளும் தவ வாழ்வு மேற்கொண்டு இருந்தனர். அங்கு இருந்த சில பெண் துறவிகளிடத்தில் ஆண் மாணுக்கர் சிலர் இருந்தனர் என்று கல்வெட்டால் அறிகிறோம்.

'திருமலைக் குரத்திகள் மாணுக்கன் எனதி குத்தன்' என்பவன் ஒருவன் குறிக்கப்பட்டுள்ளான்.

S.I.I. Vol. V No. 370.

# மூன்றாம் இராசராச சோழனின் பட்டத்தரசி

சு. இராஜகோபால், M.A. Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

சோழப் பேரரசில் இறுதியாக அரசுக்கட்டில் ஏறிய மன்னர்களில் மூன்றாம் இராசராசன் (கி.பி. 1218-1256) குறிப்பிடத்தக்கவன். இவனது ஆட்சிக் காலத்தில் தான் சோழப் பேரரசு வீழ்ச்சி என்னும் வாயிலினுள் நுழையத் தொடங்கியது. அண்மையில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டில் குறிக்கப்படும் ஒரு சோழ அரசி இவனது பட்டத்தரசியாக இருக்கக்கூடும் என்பதை இக்கட்டுரை விளங்குகிறது.

இவனது மெய்கீர்த்தி இவனது வெற்றிகள் எதனையும் குறிப்பிடாவிட்டாலும், இவனது சிறப்புக்களையும், இவனது பட்டத்தரசியின் சிறப்புக்களையும் கூறுகிறது. இவனது பட்டத்தரசி "மங்கையர்களுக்கு அரசி; இராசராசனுடன் ஒக்க மணிமுடி கவித்தவள்; இவனைப் பிரியாத வேளைக்காரி; இயல் வாழவும் இசை வாழவும், இராசராசனின் திருத்தாலி பெற்ற பேறுடையவள்; தனியாணை, உடனாணை செய்யும் உரிமை பெற்றவள்; புவனியெழத் தனதாணையிற் புரக்கும் அந்தப்புர சக்கரவர்த்தி; பொய்யா நிலநான்கும், பொருகுடையிருநான்கு மாதிரமும் விளங்க வந்த வாணர் குல நிலை விளக்கு; காசெறிய கோடெயில் வானவர் சசிகுலதீப தராபதி; விண்ணுலக அருந்ததி; சோணாடன் சூரிமலர்ப்பூந்துழாய் மார்பில் பூணார மென விளங்கிய புவனமுழுதுடையவள்."[1] மேலும் இவள் இராசராசனுடன் போர் முனைக்குக்கூடச் சென்றதாகத் தெரிகிறது.[2]

மெய்க்கீர்த்தியில் இவள் "வாணவர் குல நிலைவிளக்கு' என்றும் 'வானவர்சசி குல தீபதராபதி' என்றும் குறிக்கப்படுவதைக் கருத்தில் கொண்டு இவள் மகத நாட்டுக்[3] குறுநிலமன்னனான வாணகோவரையரது புதல்வி என்று திரு. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எண்ணுகிறார்கள்.[4] அவர்களது யூகத்தை ஏற்றுக் கொள்வதுபோல அண்மையில் கிடைத்த கல்வெட்டுச் செய்தி உள்ளது.

தருமபுரி மாவட்டம், கிருஷ்ணகிரி வட்டம் பெண்ணேச்வரமடம் என்ற ஊரிலிருந்து அக்கல்வெட்டு கிடைத்துள்ளது. இவ்வூரில் உள்ள சிவன் கோயிலில் சுமார் 25 கல்வெட்டுகள் உள்ளன. இவை கி.பி. 13, 14, 15-ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த சோழர், போசளர், விஜயநகர மன்னர்கள் காலத்தியவை. இவற்றில் வடக்குத் திருச்சுற்றில், நான்முகனின் கீழ் குமுதப்படையில் உள்ள கல்வெட்டே இச்செய்தியைக் குறிப்பிடுகின்றது.

இக்கல்வெட்டு செண்டு, புலி ஆகிய அரச சின்னங்கள் முதலில் பொறிக்கப் பட்டு விளங்குகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வாணகோவரையர் மகளார் கூத்தாடுந்தேவர்னாச்சியார் சோழனை முழுதுமுடை
2. யார் பெண்ணைநாயனாற்கு திருநந்தா விளக்குக்கு குடுத்த பசு பத்து ஜஷஹழ க.

கூத்தாடும்தேவர் நாச்சியார் என்பவர், வாணகோ அரைசரின் மகள் எ. சோழனை முழுதுமுடையவர் என்றும் இவர் பெண்ணை நாயனாருக்கு நந்தாவிளக்குக்காக பத்து பசுவும் ஒரு எருதும் கொடுத்துள்ளார் என்பதும் கல்வெட்டுச் செய்தி சோழ அரசின் முத்திரையான புலியும், செண்டும் பொறிக்கப்பட்டுள்ளது. இக் கல்வெட்டிற்குக் கொடுக்கப்பட்ட ஒரு சிறப்புத் தன்மையைக் காட்டுகிறது.

கல்வெட்டில் 'கூத்தாடும்தேவர் நாச்சியார்' என்பவர் சோழனை முழுதுமுடையவர் என்று மட்டுமே குறிக்கப்படுவதால், எந்த சோழனை முழுதுமுடையவர் என்பது கேள்விக் குறியாகிறது.

இக்கோயில் கல்வெட்டுகளில் இரண்டு சோழ அரசர்கள் குறிப்பிடப்படுகின்றனர். ஒருவன் 'திரிபுவனவீரசோழன்' என்ற மூன்றும் குலோத்துங்கசோழன், மற்றொருவன் இராசராச சோழன். இக்கோயில் கல்வெட்டுகளில் மூன்றும் குலோத்துங்கசோழன் கல்வெட்டே காலத்தால் முந்தியது ஆதலால், இங்கு குறிப்பிடப்படும் இராசராசன், அவனுக்குப் பின்வந்த மூன்றும் இராசராசனாகத்தான் இருக்கவேண்டும்.

மூன்றும் குலோத்துங்க சோழனின் கீழ் ''பொன்பரப்பினான் மகதைப் பெருமாளான இராசராச வாணகோவரையன்'' என்பவன் குறுநில மன்னனாக இருந்திருக்கின்றான்.[5] ஆனால் மூன்றும் குலோத்துங்கன் வாணர் குலத்துடன், மணத்தொடர்பு கொண்டிருந்ததற்கான சான்றுகள் இல்லை. இவனுக்குப்பின் ஆட்சிக்கு வந்த மூன்றும் இராசராசன் வாணர் குலத்துடன் மணத்தொடர்பு கொண்டிருந்தான் என்பதை அவனது மெய்க்கீர்த்தியால் அறியமுடிகிறது. அவனுக்குப்பின் ஆட்சிக்கு வந்தவனும் சோழ மன்னர்களில் கடைசி மன்னனுமான மூன்றும் இராசேந்திரனும் வாணருடன் மணத்தொடர்பு கொண்டிருந்தற்கான சான்றுகள் இல்லை. எனவே இங்கு கல்வெட்டில் குறிக்கப்படும் ''கூத்தாடுந்தேவர் நாச்சியார்'' என்பவர் மூன்றும் இராசராசனின் பட்டத்தரசியாகத்தான் இருக்க வேண்டும் என்று கொள்வதில் தவறில்லை.

இவள் எந்த வாணகோவரையரது மகள் என்பது அடுத்துள்ள கேள்வி. மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் பொன் பரப்பினான் மகதைப் பெருமாளான இராசராச வாணகோவரையன் என்று ஒரு வாணகுல அரசன் இருந்தான் என்று கண்டோம். இவன் திருவண்ணாமலையில் பொன்பரப்பி, திருப்பணிகள் பல செய்துள்ளான். 20 க்கு மேற்பட்ட செய்யுள் வடிவ கல்வெட்டுகள் இவனைப் பற்றிக் குறிக்கின்றன. இவன் மூன்றும் குலோத்துங்கனுடன் நட்பு கொண்டிருந்தான் என்றும், சில போர்களில் கலந்துகொண்டான் என்றும் தெரிகிறது.

மூன்றும் இராசராசன் காலத்திலும் ஒரு வாணர்குல மன்னன் இருந்தான். இவனது பெயர் தெரியவில்லை. ஆனால் இவன் மூன்றும் இராசராசன் ஆட்சிக்கு வந்த காலத்திலிருந்தே. அவனுடன் பகைமை கொண்டிருந்திருக்கின்றான். மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழ நாட்டைக் கைப்பற்றியபோது, ஒரு பகுதியை வாணர் குல மன்னனுக்குக் கொடுத்ததும்,[6] இராசராசனின் உதவிக்கு வந்த போசள மன்னன் வீரநரசிம்மன் மகத நாட்டு வாணர்களைத் தாக்கியதும்,[7] வாணர்கள் மூன்றும் இராசராசன் காலத்தில் நட்புடன் இல்லை என்பதைத் தெளிவாக்குகின்றன.

எனவே மூன்றும் இராசராசனின் மணத்தொடர்பு மூன்றும் குலோத்துங்கன் காலத்திலேயே ஏற்பட்டிருக்கவேண்டும். இவனது மெய்க்கீர்த்தியில் இவனது அரசி இவனுடன் 'ஒக்க மணிமுடி கவித்தவள்' என்று குறிப்பிடப்படுவதை மூன்றும் இராசராசன் பட்டத்திற்கு வந்தபொழுதே இவளும் பட்டத்தரசியானாள் என்று

ஙலாம். இவை சரியெனில் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் விளங்கிய பான் பரப்பினன் மகளைப் பெருமாளான இராசராச வாணகோவரையரின்'' புதல்வியாக இங்கு கல்வெட்டில் குறிக்கப்படும் ''கூத்தாடும் தேவர் நாச்சியாரை''க் கொள்வதில் தவறில்லை.

''கூத்தாடும் தேவர் நாச்சியார்'' என்ற இவரது பெயர் சுவையாக உள்ளது. சோழர்களின் குலநாயகனைத் தில்லையில் தாண்டவமாடும் நடராசப்பெருமான், பல்வேறு இடங்களில் குறிப்பிடப்படுவதை நோக்கின், மூன்றும் இராசராசனின் பட்டத்தரசி 'கூத்தாடும் தேவர் நாச்சியார்' தங்கள் குலநாயகனிடம் கொண்ட ஈடுபாட்டால் அப்பெயர் பெற்றிருப்பாரோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

அடிக்குறிப்பு :

1. மூன்றும் இராசராசனின் மெய்க்கீர்த்தி 'பிற்கால சோழர் சரித்திரம்' பகுதி II—திருசதாசிவ பண்டாரத்தார்—மூன்றும் பதிப்பு—பக்கம் 229
2. 'யாவரும் கேளிர்'—திரு இரா. நாகசாமி—பக்கம் 105
3. மகதநாடு என்பது சேலம் (தர்மபுரி உட்பட்டது), தென்னார்காடு மாவட்டங்களில் அடங்கியது.
4. திரு சதாசிவபண்டாரத்தார் பி. சோ. சரித்திரம் பகுதி II—மூன்றும் பதிப்பு—பக்கம் 200
5. Ibid Page 177
6. Ibid Page 186.
7. திருவயீந்திரபுரம் கல்வெட்டு Ep. Ind. Vol. XXIII No. 27.

---

## சமண வைராகி

வைராகி என்ற சொல் இப்பொழுது, பெரும்பாலும் வடநாட்டில் இருந்து வரும், சைவத் துறவிகளை குறிக்கப் பயன் படுகின்றது. ஆனல் இது வைராக்கியர் — (கோட்பாடுகளில் உறுதி தளராமல் பிடித்த பிடியில் இருப்பவர்) என்ற சொல்லிலிருந்து மருவிய சொல்லாக இருக்க வேண்டும். தீவிர, தளராத கோட்பாடுகளை மேற்கொண்டவர்களை ''வைராக்யர்'' என்று கல்வெட்டு குறிக்கிறது. சமணத் தத்துவங்களை எடுத்துரைத்த வைராகியரும் உண்டு.

''சித்தாந்தம் உரைக்கும் பட்டர் உட்பட வைராக்யர் பதின்மர்'' என்று கழுகுமலைச் சமணர் கல்வெட்டில் குறிக்கப் படுகிறது.

S.I.I. Vol. V. No. 405

# மதகு அமைத்த மாமுனிவர்

இரா. பூங்குன்றன், M.A., Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

வடார்க்காடு மாவட்டத்தில் போளூருக்கருகில் உள்ள திருமலை, சமணர் திருப்பதியாக விளங்கி வருகிறது. இங்கு கி. பி. 8-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த சமணச் சிற்பங்கள் உள்ளன. 10-ஆம் நூற்றுண்டிலிருந்து கல்வெட்டுக்கள் அவ் வூரின் வரலாற்றை அறிய உதவுகின்றன. 15-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த ஓவியங் கள் உள்ளன. இங்கு ஒரு சமணப்பள்ளி இருந்தது. இவ்வூர் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் பள்ளிச்சந்தமாக இருந்தது.

இவ்வூர் சமணப்பள்ளியில் பல சமணப் பெரியார்கள் வாழ்ந்தனர். அரிஷ்ட நேமி ஆசாரியார், பரவாதிமல்லர், குணவீர மாமுனிவர் போன்றவர்களைக் குறிப் பிடலாம். பரவாதிமல்லர் என்பவர் கடைக்கோட்டூரைச் சேர்ந்தவர். இவர் அரிஷ்டநேமியின் மாணவராக இங்கு தங்கியிருந்தார். சிரவணபெல்குளத்தில் உள்ள ஒரு கல்வெட்டு பரவாதிமல்லர் என்பவரைப்பற்றிக் கூறுகிறது. இவ்விரு கல்வெட்டுக்களும் ஒருவரையே குறிக்கிறது எனலாம். கி பி. 8-ஆம் நூற்றுண் டைச் சேர்ந்த ஒரு சிதைந்த கல்வெட்டு ஶ்ரீ(நந்)தி குரவடிகள் என்பவரைப்பற்றிக் கூறுகிறது.

குணவீரமாமுனிவர் என்பவர் கி. பி. 10, 11-ஆம் நூற்றுண்டுகளில் வாழ்ந் தவர். முதலாம் இராசராச சோழனின் இருபத்தியொன்றும் ஆட்சி ஆண்டு கல் வெட்டு ஒன்று இவரைப்பற்றிக் கூறுகிறது. கல்வெட்டு இராசராசனின் மெய்க் கீர்த்தியுடன் தொடங்குகிறது. கல்வெட்டு முழுமையும் பாடல் வடிவில் அமைந் துள்ளது.

குணவீரமாமுனிவர் திருமலையில் உள்ள ஏரிக்கு மதகு கட்டினர். இச் செய்தியைக் கூறவே இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டது. 'மருபொற்சூரியன்' என்பவர் பேரால் அம்மதகு கட்டப்பட்டது. நமது நாட்டின் பண்டைய பொரு ளாதாரத்தில் வேளாண்மையே முதுகெலும்பாகவிருந்தது. ஆகவே அதனை வளப் படுத்தும் வகையில் பண்டைய மன்னர்களும் பெரியார்களும் சிந்தித்தனர், செயல் பட்டனர். ஆகவே குணவீரமாமுனிவனும்,

"நிலைநிற்குங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடூழி இருமருங்கும் நெல் விளையக்கண்டான்"

என்று கல்வெட்டு கூறுகிறது.

இனி, கல்வெட்டு வாசகத்தை முழுமையாகக் காண்போம். அழகிய விருத்த வடிவில் அமைந்துள்ள அந்த வாசகம், இலக்கிய நயமிக்கது.

அலைபுரியும் புனற்பொன்னி யாறுடைய சோழன்
அருண் மொழிக்கு யாண்டிருபத் தொன்ருவதென்றும்
கலைபுரியும் மதிநிபுணன் வெண்கிழான் கணிச்செ
கர மரு பொற் சூரியன்றன் நாமத்தால்வாம

# மதகு அமைத்த மாமுனிவர்

இரா. பூங்குன்றன், M.A., Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

வடார்க்காடு மாவட்டத்தில் போளூருக்கருகில் உள்ள திருமலை, சமணர் திருப்பதியாக விளங்கி வருகிறது. இங்கு கி. பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சமணச் சிற்பங்கள் உள்ளன. 10-ஆம் நூற்றாண்டிலிருந்து கல்வெட்டுக்கள் அவ்வூரின் வரலாற்றை அறிய உதவுகின்றன. 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓவியங்கள் உள்ளன. இங்கு ஒரு சமணப்பள்ளி இருந்தது. இவ்வூர் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் பள்ளிச்சந்தமாக இருந்தது.

இவ்வூர் சமணப்பள்ளியில் பல சமணப் பெரியார்கள் வாழ்ந்தனர். அரிஷ்டநேமி ஆசாரியார், பரவாதிமல்லர், குணவீர மாமுனிவர் போன்றவர்களைக் குறிப்பிடலாம். பரவாதிமல்லர் என்பவர் கடைக்கோட்டூரைச் சேர்ந்தவர். இவர் அரிஷ்டநேமியின் மாணவராக இங்கு தங்கியிருந்தார். சிரவணபெல்குளத்தில் உள்ள ஒரு கல்வெட்டு பரவாதிமல்லர் என்பவரைப்பற்றிக் கூறுகிறது. இவ்விரு கல்வெட்டுக்களும் ஒருவரையே குறிக்கிறது எனலாம். கி பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு சிதைந்த கல்வெட்டு பூரி(நந்)தி குரவடிகள் என்பவரைப்பற்றிக் கூறுகிறது.

குணவீரமாமுனிவர் என்பவர் கி. பி. 10, 11-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர். முதலாம் இராசராச சோழனின் இருபத்தியொன்றாம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு ஒன்று இவரைப்பற்றிக் கூறுகிறது. கல்வெட்டு இராசராசனின் மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகிறது. கல்வெட்டு முழுமையும் பாடல் வடிவில் அமைந்துள்ளது.

குணவீரமாமுனிவர் திருமலையில் உள்ள ஏரிக்கு மதகு கட்டினார். இச்செய்தியைக் கூறவே இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டது. ' மருபொற்சூரியன் ' என்பவர் பேரால் அம்மதகு கட்டப்பட்டது. நமது நாட்டின் பண்டைய பொருளாதாரத்தில் வேளாண்மையே முதுகெலும்பாகவிருந்தது. ஆகவே அதனை வளப்படுத்தும் வகையில் பண்டைய மன்னர்களும் பெரியார்களும் சிந்தித்தனர், செயல்பட்டனர். ஆகவே குணவீரமாமுனிவனும்,

" நிலைநிற்குங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடூழி இருமருங்கும் நெல் விளையக்கண்டான் "

என்று கல்வெட்டு கூறுகிறது.

இனி, கல்வெட்டு வாசகத்தை முழுமையாகக் காண்போம். அழகிய விருத்த வடிவில் அமைந்துள்ள அந்த வாசகம், இலக்கிய நயமிக்கது.

அலைபுரியும் புனற்பொன்னி யாறுடைய சோழன்
அருண் மொழிக்கு யாண்டிருபத் தொன்றுவதென்றும்
கலைபுரியும் மதிநிபுணன் வெண்கிழான் கணிச்செ
கர மரு பொற் சூரியன்றன் நாமத்தால்வாம

நீலே நிற்குங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலேக்கு
நீடூழி இருமருங்கும் நெல்விளையக் கண்டோன்
கொலே புரியும் படையரசர் கொண்டாடும்பாதன்
குணவீர மாமுனிவன் குளிர் வைகைக் கோவே.

தமிழகத்தில் 'குணவீரர்' என்ற பெயர்கொண்ட சமணப் பெரியார்கள் பலர் வாழ்ந்தவர். அவர்களில் சிலர் தமிழ் இலக்கிய உலகிற்கும் சிறந்த தொண்டு ஆற்றியுள்ளனர். குணபத்திரர், குணவீரபண்டிதர், குணசாகரர் போன்றவர்களைக் குறிப்பிடலாம். மேற்குறிப்பிட்டவர்களில் குணவீரபண்டிதர் கி. பி. 12-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் என்பதில் கருத்து வேறுபாடில்லை. குணபத்திரர், குணசாகரர் போன்றவர்கள் குணவீரமாமுனிவரின் சமகாலத்தவராகவும் இருக்கலாம். அவருக்குச் சிறிது காலத்துக்கு முற்பட்டவர்ளாகவும் இருக்கலாம். எப்படியிருந்த போதிலும் குணவீரமாமுனிவர் இவ்விருவரிலும் வேறுபட்டவர். கல்வெட்டில் தமிழ்ப்புலமைச் சிறப்பு பற்றியோ, யாத்த நூல் பற்றியோ எதுவும் சொல்லப்பட வில்லே என்பது குறிப்பிடத்தக்கது.

தென்னார்க்காடு மாவட்டம், கோவலூரில் கி. பி. 10-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று 'குணவீரபடாரர்' என்பவரைப்பற்றிக் குறிக்கிறது. குணவீரபடாரரும், முனிவரும் ஒருவராதல்கூடும் என்று ஒரு சாரார் கருதுகின்றனர். குணவீரபடாரரும், குணவீரமாமுனிவரும் வேறுனவர்கள். இருபெயரும் ஒருவரைக் குறிப்பன வல்ல. குறண்டி குணவீரபடாரர் என்று குறிக்கப்படுவதிலிருந்து இருவரும் வேறுனவர் என்பது புலப்படும். குண வீர மாமுனிவர்க்குரிய ஊராக குறண்டி குறிக்கப்படவில்லே. இதிலிருந்து ஒரு விஷயத்தைக் கூறலாம். 'குணவீரர்' சமண முனிவர்களில் பலருக்கு வழங்கப்பட்ட பெயராகும் அது மட்டுமின்றி இப் பெயர் கொண்ட சில முனிவர்கள் சமகாலத்தவர்களாகவும் வாழ்ந்திருக்கின்றனர்.

'மருபொற் சூரியன்' என்பவர் பெயரால் இந்த மதகு கட்டப் பெற்றது. 'கலேபுரியும் மதி நிபுணன் வெண் கிழான் கணி சேகர மருபொற் சூரியன்' என்று கல்வெட்டு கூறுகிறது. கலேயை வளப்படுத்தும் நுண் மாண் நுழை புலம் வாய்ந்தவர் என்பது கல்வெட்டில் கூறப்படும் செய்தியாகும். 'கணிசேகர மருபொற் சூரியன்' என்பதனல் இவர் சமண முனிவர்களுள் தலேயாயவர் என்பது விளங்கும். கணி என்பது சமண முனிவரைக் குறிக்கும் சொல். கி. மு. 2 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த தமிழ் கல்வெட்டில், கணி என்ற சொல் காணப்படுறது.

பள்ளன் கோயில் செப்பேட்டில் சமஸ்கிருதப் பகுதியில் 'கணி' என்ற சொல் சமண முனிவரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சமண முனிவர்கள் கணிதத்திலும், சோதிடத்திலும் ஈடுபாடு கொண்டவர்கள். அதுவுமன்றி அவற்றில் நிறைந்த புலமையும் பெற்றிருந்தார்கள். சமணமுனிவர்கள் பல பிரிவுகளைச் சார்ந்திருந்தார்கள். இவ்வாறு சார்ந்த பிரிவுகளே 'அவை' என்பது போல் கணம் என்பதும் மரபு. அக்கணத்தைச் சார்ந்தவர்களைக் 'கணி' என்பதும் மரபு.

வெண் கிழான் என்று பொற் சூரியன் குறிக்கப்படுகிறர் 'கிழான்' என்ற சொல் பெரும்பாலும் வேளாளரைக் குறிக்கும். அவர்களுள் தலேயாயவர்களைக் கிழார் என்று கூறுவதைக் காண்கிறேம். வெண் கிழான் என்பது வேளாளரைக் குறிப்பதாகலாம். இன்னும் திருமலே வாழ் சமணர்களே (வெள்ளாமர்) வேளாளர் என்று அழைக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

திரு. ஹூல்ஷ் அவர்கள் 'மரு பொற் சூரியன் என்பது விருஷப தேவரைக் குறிப்பதாகலாம் என்று கருதுவார். மரு என்ற அடைச்சொல் மாரு தேவியைக் குறிக்கப் பயன் படுத்தபடுகிறது. மாரு தேவி விருஷபதேவரின் தாய். ஆகவே மரு பொற் சூரியன் என்ற பெயர் விரிஷபதேவரைக் குறிப்பதாகலாம் என்று அவர் யூகம் செய்கிறார். பொற் சூரியன் என்பவர் குண வீர மாமுனிவருக்கு முன் வாழ்ந்த ஒரு முனிவரைக் குறிப்பதாகவும் இருக்கலாம்.

திருமலைக்கு வடக்கில் அமைந்துள்ள ஏரியில் ஒரு மதகு 'பள்ளி மதகு' என்று இப்போது அழைக்கப்படுகிறது. இந்த ஏரி புதுப்பிக்கபட்டபின் மதகிற்குச் சிமெண்ட் பூசியிருப்பதால் இதன் பழமையை யூகிக்க முடியவில்லை. இருப்பினும் பள்ளி என்ற சொல் அதன் பழமையை விளங்கிக் கொள்ள உதவும் எனலாம்.

---

## நடுகல்லில் அஞ்சி

நடுகல்லைப் படியெடுக்கச் செல்லும் போது பல இடர்பாடுகள் உண்டு. அதன் கீழ் ஏழு கொப்பரைப் பணம் இருக்கும் என்றும், பூதம் காக்கும் என்றும், மக்கள் நம்புகிறார்கள். ஆதலால் மக்கள் நடுகல்லை அஞ்சி ஒதுங்குவர். ஆனால் இது 'நடுகல்லில் அஞ்சி' ஆகும். தருமபுரி மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நடுகல் இது. மகேந்திரவர்மன் காலத்துக் கல்வெட்டு. இதில் ஒரு வீரனுடைய பெயர் 'கடிகாவின் அஞ்சி' என்று குறிக்கப்படுகிறது.

சங்க காலத்தில் அதியமான் நெடுமானஞ்சி, தகடூரைத் (தற்காலத் தருமபுரி) தலைநகராகக் கொண்டு ஆண்டவன். தற்போது (அதே மாவட்டத்தில்) அந்தப் பகுதியில் ஒரு கல்வெட்டு படியெடுக்கப் பட்டுள்ளது. இந்த நடுகல்லில் அஞ்சி என்பவன் குறிக்கப்படுகின்றான். 'கடிகாவின் அஞ்சி' என்பது இவன் பெயர். இவன் 7-ஆம் நூற்றாண்டில் திகழ்ந்த சிற்றரசன். இதன் மூலம் அஞ்சியின் வழியினர் தொடர்ந்து வந்துள்ளனர் என்பது புலனாகிறது. இதில் உள்ள 'கடிகா' என்ற சொல்லும் குறிக்கத்தக்கது. 'கடிகாவிற் பூச்சூடினன்' என்ற சங்ககால அடியும் நினைவு கொள்ளத் தக்கது. கடிகாசலம் என ஒரு மலையின் பெயரும் உண்டு.



தீதறு திங்கள் பொங்குசுடர் உம்பர்
உம்பர் உலகு ஏழினோடும் உடனே
மாதிரம் மண்சுமந்த வடகுன்றும் நின்ற
மலை ஆறும் ஏழு கடலும்
பாதமர் சூழ் குளம்பின் அக மண்டலத்தின்
ஒருபால் ஒடுங்க வளர் சேர்
ஆதிமுன் ஏனமாகி அரண் ஆயமூர்த்தி
அது நம்மை ஆளும் அரசே.

(நாமக்கல் அதியேந்திர விண்ணகரக் குடைவரைச் சிற்பம்—8-ஆம் நூற்றாண்டு.)

# உடன்பிறந்தார் மூவர் நடுகற்கள்

செல்வி நா. மார்க்சிய காந்தி M.A., Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

'நேற்றுக்கு முந்திய நாள் நடந்த போரில் தன் தமையனை இழந்தாள். நேற்றையப் போரில் தன் கொழுநனை இழந்தாள். இன்றோ தன் குலத்திற்கே ஒருவனென விளங்கும் மகனையும் கையில் வேல் கொடுத்துச் செருமுகம் நோக்கி விடுகின்றாள்! கெடுக சிந்தை; கடிது இவள் துணிவு' என்று கூறி அங்கலாய்ப்பார் சங்கத்துச் சான்றோர் ஒருவர். இது இலக்கியம். உண்மையா என்று எண்ணுவது இயல்பு. ஆனால் ஒரே வீட்டில் உள்ள உடன்பிறந்தார் மூவரும் போரில் இறந்துள்ளனர்! மூவரும் ஓர் ஆசிரியரின் மக்கள். கல்வியிலும், வீரத்திலும் ஒருங்கே சிறந்த தந்தை; தன் வீரத்தால் நாட்டை ஆண்ட குறுநில மன்னர் அவர். தன் மக்கள் மூவரையும் போருக்கு அனுப்பியுள்ளார். போரில் இறந்த அம்மூவருக்கும் வரிசையாக நடுகல் எடுத்துள்ளனர்.

தருமபுரி மாவட்டம், ஊத்தங்கரை வட்டம், புலியானூர் என்ற ஊரினின்று மூன்று நடுகற்கள் படியெடுக்கப்பட்டு வந்துள்ளன. அவை வட்டெழுத்துக் கல்வெட்டுகள். அவற்றில் ஒன்று சிம்ம விஷ்ணுவின் காலத்தது; இரண்டு அவனை அடுத்து ஆண்ட மகேந்திரவர்மன் காலத்தவை; ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்தன; இக்கல்வெட்டுகளில் மேல்வெண்நாட்டு சிறுபாழ் ஆளும் பாலாசிரியரின் மக்கள் மூவர் குறிக்கப்படுகின்றனர்.

முதற்கல்வெட்டு, சிம்மவிஷ்ணுவின் 19–ஆம் ஆட்சி ஆண்டைச் சார்ந்தது. 'கருங்காலிப் பாடி' என்ற ஊரின் ஆநிரைகளை கவர்ந்த இடத்துப் போரில் பட்ட மறவனைக் குறிக்கிறது. அவன், சிறுபாழ் ஆளும் பாலாசிரியரின் மகன். சிறுப்படுவானூர்' என்று குறிக்கப்படுகிறான். இரண்டாம் கல்வெட்டு, மகேந்திரவர்மனின் 20–ஆம் ஆட்சி ஆண்டில் நடைபெற்ற போரைக் குறிக்கிறது. இதில் 'கட்டையூர்' என்ற ஊரில் தொறுவினைக் கவர்ந்த போது பாலாசிரியரின் மகன் வீரவன் என்பவன் இறந்துபட்டான் என்று குறிக்கப்படுகிறது. மூன்றாம் கல்வெட்டும் இதே மன்னனின் இதே ஆட்சி ஆண்டைச் சார்ந்ததே. 'கங்கலூர்' என்ற ஊரில் ஆநிரை கவர்ந்த போது, பாலாசிரியர் மகன் 'மாறன்' என்பவன் பட்டான் என்று குறிக்கிறது.

இக்கல்வெட்டுகள் மூலம், சிறுப்படுவானூர், வீரவன், மாறன் ஆகிய மூவரும் உடன் பிறந்தார் என்பது வெளிப்படை. இவர்களின் தந்தை, பாலாசிரியர் என்று குறிக்கப்படுகிறார். சங்க இலக்கியப்புலவர்களில் பாலாசிரியர் சேந்தன் கொற்றனார், பாலாசிரியர் நப்பாலனார், பாலாசிரியர் நற்றமனார் ஆகியோர் மதுரையைச் சார்ந்தவர்களாகக் குறிக்கப்படுகின்றனர். கல்வியின் முதல் நிலைகளைக் கற்பிப்போர் பாலாசிரியர் என்று அழைக்கப்பட்டனர் போலும்! இளம்பாலாசிரியர்' என்றும் ஒரு சங்கப் புலவர் குறிக்கப்படுகிறார். எனவே இங்கு குறிக்கப்படும் 'பாலாசிரியர் கல்வி புகட்டும் சிறப்புடையர் என்ற போதிலும். தானே நாட்டின் ஒரு பகுதியினை ஆளும் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார். மூன்று கல்வெட்டுகளிலும், பல்லவ மன்னர்களைக் குறித்த பின்னர், மேல்வெண்நாட்டின் ஒரு பகுதியான சிறுப்பாழ் என்ற இடத்தினை ஆளும் பாலாசிரியர் என்றே குறிக்கப்படுகிறார்.

**முதல் கல்வெட்டு**

கோவிசைய
ஒங்கவிண்ணபருமற்குப் பத்தொன்பதாவது
மேல்வெண்ணாட்டுச் சிறுப்பாழ் ஆளும் பாலாயிரியரு மக்கள்
சிறுப்படுவாளுரு
கருங்காலிப்பாடித் தொறுக்கொளப் பூசல் சென்று
புயநாட்டுப் பில[யாசத]ங்கள் எறிந்துபட்டான் கல். 1972 | 2

**இரண்டாம் கல்வெட்டு**

கோவிசைய
மசிந்திரபருமற்கு இருபதாவது
மீவெண்ணாட்டு கட்டை ஊர்தொறுகொண்ட ஞான்று
சிறுபாழாளும் பாலாசிரிகரு மகன் வீரவரு
கல். 1972 | 3

**மூன்றும் கல்வெட்டு**

கோவிசை
[ம]சந்திர பருகு இருபது
அண்ட மீவெண்நாடு சிறுபாழ் ஆள்வார் பாலாசிரிரு மக்கள் மாறன்
கங்கலூரு தொறு கொள் ஞான்று பட்டான்
கல். 1972 | 4

தன் மக்கள் மூவரை நாட்டுக்காகக் கொடுத்த உத்தமர் ஒருவரைப் பற்றிக் கூறும் மூன்று நடுகற்கள் ஆயிரத்து மூன்னூறு ஆண்டுகட்கு முன் எடுக்கப்பட்டவை இன்றும் அவர் புகழை எடுத்தியம்புகின்றன.

---

## இது என்ன இரட்டைப் புதையல்!



இதற்கான குறிப்பை அடுத்த பக்கம் பார்க்க.

# இது என்ன இரட்டைப் புதையல் ?

இறந்து பட்ட கணவனுடன் பெண்டிர் தீப்பாயும் வழக்கம் உண்டு. இறந்த கணவனை எரிக்காமல், குழியில் புதைத்தால், பெண்டிரையும் குழியில் போட்டுப் புதைக்கும் மரபும் உண்டு என்பதைச் சென்ற 'கல்வெட்டில்' கண்டோம். இவ் வழக்கம் தமிழகத்தில் உண்டா என்பது கேள்வி. உண்டு என்பது பதில்.

3-வது குலோத்துங்க சோழன் காலத்தில் இதுபோன்ற ஒரு நிகழ்ச்சி நடந்து உள்ளது. வட ஆற்காடு மாவட்டத்தில் தாமரைப்பாக்கம் என்ற ஊரில் கோயிலில் ஒரு கல்வெட்டு உள்ளது. அதிலிருந்து கூத்தாடும் தேவனான பிருதிவிகங்கன் என்பவன் இறந்து போனான் என்று அறிகிறோம். அவன் ஒரு ஆடுகின்ற கூத்தன் போலும்! இறந்த அவனைக் குழியில் புதைத்திருக்கிறார்கள். அவனுடன் பாடுகின்ற சிலபெண்களும் உடன் புதைக்கப்பட்டுள்ளனர். அதைக் கல்வெட்டு 'உடன் பள்ளிகொள்ளல்' என்று குறிக்கிறது. அவ்வாறு புதைக்கப்பட்ட பெண்டிரின் 'மனக்கேதம்' தீர்ப்பதற்கு இறந்தவனின் மகன் ஒரு வேலி நிலம் கொடுத்திருக்கிறான். அந்நிலத்தைப் புதைக்கப்பட்ட பெண்களின் வம்சத்தார் பெற்றுப் பயன் அடைய அளித்துள்ளான். கல்வெட்டைக் காண்போம்.

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு
யாண்டு [க]வது சோமனான பிருதிகங்கனேன்
எங்களைய்யர் கூத்தாடும் தேவரான பிருதிகங்கர் உடன்
உடன்பள்ளி கொண்ட பாடும் பெண்டிருக்கும்,
மனக்கேதம் தீர்த்தற்க்கும் சந்தர்ம்மாக
பதினாறு சாண்கோலால் விட்ட நிலம் ஒரு வேலியும்
இவர்கள் வங்கிசமும் உள்ளளவும் செல்வதாக
விட்ட நிலத்துக்கு, நம் வங்கிசத்து இதுக்கு இலங்கணம் சொல்லுவார்
மதுராந்கக வேளான் கால் கழுவின நீரும் குடிச்சி, கலச்சோறும்
தின்பான்;
கெங்கையிடைக் குமரியிடைச் செய்த பாவங்கள் கொள்வான்

[மனக்கேதம்—உயிரோடு புதைக்கப் படுவதால் ஏற்படும் துன்பம்;
சந்தர்மம்—நல்லறம்;]

எங்கே தன்னுடைய பின் வந்தோர் இதற்குத் தவறிழைப்பார்களோ என்று எண்ணி நிலம் கொடுத்தவன் சில பழிபாடுகளைக் குறிக்கிறான். மதுராந்தக வேளான் என்பவன் இவர்களுடைய பரமவைரி போலும்! தம் வம்சத்தார் இதற்குத் தவறிழைத்தால் தன்மாற்றான் காலைக் கழுவின நீரைக் குடித்தல், அவன் உண்டு எஞ்சிய கலச்சோற்றை உண்ணுதல் ஆகிய பழிகளில் படுவான் எனக் குறிக்கிறான்.

இக்கல்வெட்டிலிருந்து இறந்தாருடன் பெண்டிரை உயிரோடு புதைக்கும் மரபு தமிழகத்திலும் உண்டு என்று அறிகிறோம்.



சுமார் 2000 ஆண்டுகட்கு முன்னர் இறந்துபட்டவர்களைப் புதைத்த இடத்தில் பல்வேறு ஈமச்சின்னங்களை எடுக்கும் மரபு உண்டு. அச்சின்னங்கள் பெருங்கற்களைக் கொண்டு அமைக்கப்பட்டவை. கல்வட்டம், கல்திட்டை, கற்பதுக்கை எனப்பல அமைதிகளை உடைய இச்சின்னங்களைப் பெருங்கற் சின்னங்கள் என்று வரலாற்றாசிரியர் குறிப்பர். இவை தமிழகமெங்கும், பரவலாக மிகுந்து காணப்படுகின்றன. இவ்வீமச் சின்னங்களை எடுத்தவர்கள் திராவிடப் பண்பினர் என்று கருதுவர். இச்சின்னங்கள், திராவிடர் யார் என்ற கேள்விக்கு விடையளிக்கக் கூடியவை என்று மேலைநாட்டு வல்லுநர்களும், கீழைநாட்டு வல்லுநர்களும் கருதுகிறார்கள். கடந்த 200 ஆண்டுகட்கு மேலாக இச்சின்னங்களை அகழ்வாய்ந்தும், ஆராய்ந்தும் ஏராளமான கட்டுரைகள், நூல்கள் வெளிவந்துள்ளன. இவ்வனைத்து ஆசிரியர்களின் பட்டியலும், அவர் எழுதிய கட்டுரைகளின் சுருக்கமும் தொகுக்கப்பட்டு நூலாக இத்துறையால் வெளியிடப்பட்டுள்ளது.

A Bibliography on Indian Megaliths By K.S. Ramachandran–Rs. 12·50.



வெந்திறல் வாணன் வேள்வியிடம் எய்தி அங்கு
ஓர் குறள் ஆகி மெய்ம்மை உணர
செந்தொழில் வேதநாவின் முனிஆகி வையம்
அடி மூன்று இரந்து பெறினும்
மந்தரமீது போகி மதிநின்று இறைஞ்ச
மலரோன் வணங்க வளர்சேர்
அந்தரம் ஏழினூடு செல உய்த்த பாதம்
அது நம்மை ஆளும் அரசே.

(நாமக்கல் அதியேந்திர விண்ணகரக் குடைவரைச் சிற்பம்—8-ஆம் நூற்றாண்டு)

# ஏர்ப் பாட்டு

**நடனா. காசிநாதன், M. A.,**
பதிவு அலுவலர், தஞ்சை மாவட்டம்

கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு வேளாண் குடிப் பெருமக்கள் தங்களைச் "சித்ரமேழிப் பெரிய நாட்டார்" என்று கூறிக் கொண்டு 'ஏரை'த் தங்களின் கொடியிலே சின்னமாகப் பொறித்து வைத்திருந்தனர். பூமி அவர்களது தொழிலுக்கு அடிப்படையான ஆதாரங்களில் ஒன்று என்ற காரணத்தால் தங்களைப் "பூமி புத்ரர்கள்" என்றும் அழைத்துக் கொண்டனர்.

## கலப்பையில் கல்வெட்டு

"சித்ரமேழி பெரிய நாட்டார்" என்று அழைத்துக் கொண்ட அவர்கள் சிறிய அளவில் வெண்கலத்தால் கலப்பை செய்து அதில் சில சாசனங்களை எழுதியிருந்திருக்கிறார்கள். அத்தகைய ஒரு சிறு கலப்பை கிடைத்துள்ளது.[1]

இவ்வாறு உழு தொழிலையும், அதன் முக்கிய அங்கங்களான, பூமி, மனிதன், காளை, ஏர் ஆகியவற்றையும் நன்கு மதித்து வந்தவர்கள். உழு தொழில் நிகழும் போது ஏர் ஓட்டிச் செல்லுகின்ற மனிதனுக்கும், ஏரை இழுத்துச் செல்லுகின்ற காளைகளுக்கும் களைப்பு ஏற்படாதவாறு இருக்கச் செய்வதற்காகச் சில பாடல்களைப் பாடி மகிழ்ந்திருக்க வேண்டும். இது போன்ற பாடல்களை ஏர்ப் பாட்டு என்றும், காளைப் பாட்டு என்றும், உழவுப் பாட்டு என்றும் மக்கள் அழைக்கின்றனர். அவைகளை இன்றும் ஊர்ப்புறங்களில் உழும் பொழுது பாடிக்களிக்கிறார்கள்.

## பாட்டாளிக்குப் பாட்டெழுங் காரணம்

காலை புலருமுன்னே கலப்பையைத் தோளில் சுமந்துக் கொண்டு, காளைகளை முன்னே ஓட்டிக் கொண்டு சென்ற உழவன் வயலிலே இறங்கி ஏரைப் பூட்டி வளா வளாவாக ஏர் ஓட்டுகிறான். தனக்கு முன்னே பல ஏர்கள் செல்கின்றன. பின்னலேயும் பல ஏர்கள் வருகின்றன. சுற்றிச் சுற்றி வருகின்ற தனது காளைகள் முன்னேர் செல்லும் அளவுக்கு வேகமாகச் செல்லாததை உணர்கிறான். தனக்கும் சோர்வு ஏற்படுவது போல் தோன்றுகிறது. தன் காளைகளின் சோம்பலைப் போக்கப் பாடுவதாகப் பாடித் தன் சோர்வையும் நீக்கிக் கொள்கிறான். பாடல் எழுகிறது. இந்த உழவுப் பாடலும் கடவுள் வாழ்த்தோடேயே ஆரம்பமாகிறது.

## விநாயகர், முருகன், சரஸ்வதி துதிப் பாடல்

முழுமுதற் கடவுளாகிய விநாயகப் பெருமான், குன்றக் கடவுள் முருகன், கல்விக் கடவுள் நாமகள் ஆகியோரை உழவன் வணங்குகிறான்.

பாடல்

முந்தி முந்தி விநாயகனே என் தோழிக் காளைகளே
முருகா சரஸ்வதியே என் தோழிக் காளைகளே
கண்ணனுக்கு முன்பிறந்த என் தோழிக் காளைகளே
கணபதியே முன் வருவாய் என் தோழிக் காளைகளே
வேலனுக்கு முன் பிறந்த என் தோழிக் காளைகளே
விநாயகரே முன்னே வா என் தோழிக் காளைகளே
சக்தி கணபதியே என் தோழிக் காளைகளே
சங்கரனை வாருமையா என் தோழிக் காளைகளே

**அமுது படையில்**

அப்படி வந்து அருள் தந்தால், தான் தான் என்னென்ன செய்து படைப்பான் என்பதைப் பின்வரும் அடிகளில் உவமை நயத்துடன் எடுத்தியம்புகிறான்.

என்னென்ன நான் படைப்பேன் என் தோழிக் காளைகளே
ஏகாந்த பிள்ளையார்க்கு என் தோழிக் காளைகளே
ஆலடிப் பிள்ளையார்க்கு என் தோழிக் காளைகளே
அமுதுபடி நான் தருவேன் என் தோழிக் காளைகளே
ஆனையடி போலே என் தோழிக் காளைகளே
அப்பளங்கள் ஆயிரமாம் என் தோழிக் காளைகளே
குதிரை அடிபோலே என் தோழிக் காளைகளே
கொழுக் கட்டையும் ஆயிரமாம் என் தோழிக் காளைகளே
பூனையடி போலே என் தோழிக் காளைகளே
பொரிவிளங்காய் ஆயிரமாம் என் தோழிக் காளைகளே
பன்னியடி போலே என் தோழிக் காளைகளே
பலகாரம் ஆயிரமாம் என் தோழிக் காளைகளே
எள்ளுக் கலந்தரிசி என் தோழிக் காளைகளே
இருகலமும் பச்சரிசி என் தோழிக் காளைகளே
பயறு கலந்தரிசி என் தோழிக் காளைகளே
பதினுமும் பச்சரிசி என் தோழிக் காளைகளே

தான் விநாயகப் பெருமானுக்கு அப்பளம், கொழுக்கட்டை, பொரிவிளங்காய் உருண்டை, பலகாரம், எள்ளு கலந்த அரிசி, பயறு கலந்த அரிசி ஆகியவைகளை அமுதுபடியாக அளிப்பான் என்பதையும் ஒவ்வொன்றின் உருவமும் எந்த வகையில் இருக்கும் என்பதையும் விவரித்துள்ளான்.

முன்னேர் மாடும் பின்னேர் மாடும்

அடுத்து தன் ஏருக்கு முன்னால் செல்லும் ஏரின் மாட்டையும், தன் ஏருக்குப் பின்னால் வரும் ஏரின் மாட்டையும் விவரிக்கிறான்.

முன்னேர் மாட்டுக்கு என் தோழிக் காளைகளே
என்னென்னடையாளமாம் என் தோழிக் காளைகளே
நெத்தியிலே நெத்திச் சுட்டி என் தோழிக் காளைகளே
நெடுவாலு பூவாலாம் என் தோழிக் காளைகளே
பின்னேர் மாட்டுக்கு என் தோழிக் காளைகளே
என்னென்னடையாளமாம் என் தோழிக் காளைகளே
கொம்பிலியும் கொப்பிகட்டி என் தோழிக் காளைகளே
கொளம்பிலியும் லாடம் தச்சி என் தோழிக் காளைகளே

முதலாளியின் வருகை

அப்பொழுது தனக்குப் படியளக்கும் தன் முதலாளி கையில் குடை பிடித்துக் கொண்டு வாய்லோர வரப்பில் மெல்ல வருதலைத் தனது தோழர்களாகிய காளைகளுக்கும் உணர்த்துகிறான்.

வெள்ளைக் கொடை புடிச்சு என் தோழிக் காளைகளே-யாண்டே
வீதிமேலே வாராரே என் தோழிக் காளைகளே
கரப்புக் கொடை புடிச்சு என் தோழிக் காளைகளே-யாண்டே
காணி பார்க்க வாராரோ என் தோழிக் காளைகளே

ஆண்டை காணி பார்க்க வருகிறார். நிலத்தில் பெருமளவு ஏர் ஓட்டியாகி விட்டது என்று அவர் காண வேண்டும். எனவே வேகமாக நடந்து செல் என்பதைக் குறிப்பாலுணர்த்துகிறான்.

மனைவியைப் பாட்டி வருகை

கஞ்சி குடிக்கும் நேரம் வந்து விட்டது. வயிறு சுருங்குகிறது. பொற்கொடி போல் அசைந்து வரும் தனது மனையாளைப் பார்த்து விடுகிறான். பாடல் அவளை மையமாக எடுத்துக் கொள்கிறது.

சோளதட்டை பாலம் போட்டு என் தோழிக் காளைகளே
    சோறுகொண்டு வார பெண்ணே என் தோழிக் காளைகளே
சோறுதனும் புதடி என் தோழிக் காளைகளே-உன்
    சோதி முகம் வாடுதடி என் தோழிக் காளைகளே
கம்மந்தட்டை பாலம் போட்டு என் தோழிக் காளைகளே
    கஞ்சி கொண்டு வார பெண்ணே என் தோழிக் காளைகளே
கஞ்சி தனும் புதடி என் தோழிக் காளைகளே-உன்
    கருப்பு முகம் சோருதடி என் தோழிக் காளைகளே।

சோளத்தட்டை, கம்பந்தட்டை ஆகியவைகளால் அமைக்கப் பெற்ற பாலத்தின் மீது நடத்து வருகின்ற அளவுக்கு அவ்வளவு மெல்லிய உடலை உடையவள் தம் மனைவி என்பதைக் குறிப்பாகக் கூறுகிறான். தன் மனைவி வயலுக்கு வருவதால் அவளின் சோதி முகம் வாட்டம் அடைகிறது என்று மனம் கலங்குகிறது.

பாடலின் காலம்

இந்நாட்டுப் பாடல் தென்னாற்காடு மாவட்டம், சிதம்பரம் வட்டத்தில் பாடப் படுகிறது. இப்பாடலில், விநாயகப் பெருமானுக்கு அப்பளம், பலகாரம் ஆகியவை செய்து படைப்பதாக வருவதால் விஜயநகர் காலத்துக்குப் பிற்பட்ட (கி. பி. 1500க்குப் பிற்பட்ட) பாடலாக இது இருக்கலாம் என்று தோன்றுகிறது.

---

## சுவரன் மாப்பூதன்

செந்தலைக் கல்வெட்டில் இளங்கோ அதியரையன் ஆயின மாறன் பரமேஸ்வரனின் மகனாக பெரும்பிடுகு முத்தரையனாயின சுவரன் மாறன் என்பவன் குறிக்கப்படுகிறான். அவன் நியமத்தில் காளிக்குக் கோயில் எடுப்பித்தான். அதற்குத் தான் வெற்றிகொண்டு கொடுத்த ஊர்களையும், தன் பெயர்களையும், தன்னைப்பாடினோர் பெயர்களையும் கல்வெட்டில் பாடல் களாகப் பொறித்து வைத்துள்ளான்.

யாப்பருங்கல விருத்தி மேற்கோளில் சுவரன் மாப்பூதன் என்று ஒருவன் குறிக்கப்படுகிறான். இவன் செந்தலைக் கல்வெட்டு குறிக்கும் சுவரன் மாறனின் உடன் பிறந்தானாக இருக்கலாம். இவன் மீதும் பாடல்கள் உண்டு போலும்! நமக்குக் கிடைத்துள்ள பாடல் இது ஒன்றே. பாடல் :

உதுக்காண், சுரந்தானா வண்கைச் சுவரன்மாப்பூதன்
பரந்தானாப் பல்புகழ்பாடி - இரந்தார் மாட்
டின்மை அகல்வது போல இருள் நீங்க
மின்னும் அளித்தோ மழை



பழுவேட்டரையர்கள் தலைநகரான மன்னுபெரும் பழுவூரில் அவர்கள் தோற்றுவித்த இரு அழகிய கோயில்கள் உள்ளன. ஆதித்தசோழன் காலத்தில் இக்கோயில்கள் எழுப்பப்பட்டன. இதே ஊரில் வடதிசையில் காளி கோயில் ஒன்று உண்டு. சுமார் 1¾ மீட்டர் உயரமுள்ள இந்த எழில் வாய்ந்த காளியின் சிலை அங்கு உள்ளது ஆதித்தசோழன் காலத்துச் சிலைக்கு இது ஒரு எடுத்துக் காட்டு.

# விளக்கும் விளக்கும்

**பொ. இராசேந்திரன்,** M.A. Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.

நா. தி. பி. ம. ல. மு. பதிப்பு. பக் : 473.

ஒளித் திரட்சியாக ஓங்கி நிற்கும் இறைவனுக்கு முன்னால் பக்தி என்ற உள்ளச் சுடரின் சின்னமாக — காணிக்கையாக எண்ணற்ற ஒளி விளக்குகளை ஈந்து மகிழ்ந்தனர், பக்தி மிக்க பெரியோர் பலர். திருவிளக்கு, நொந்தா விளக்கு, நிலை விளக்கு, தரா விளக்கு, தராக்குத்தி விளக்கு, சந்தி விளக்கு, வாயில் திருவிளக்கு, சிறுநிலை விளக்கு என அவரளித்த அன்புள்ளக் கொடைகள் எத்தனை, எத்தனையோ! அவற்றையெல்லாம் தன் நெஞ்சில் பதித்து எடுத்தியம்பும் கல்வெட்டுக்கள் விளக்குகளோடு சேர்த்துத்தரும் விளக்கங்கள் பலப் பல. அவற்றுள் சில பாண்டியர் காலத்துப் பழக்கங்களைப் படம் பிடித்துக் காட்டும் பாங்கினைக் காண்போம்.

விளக்கின் தன்மை, அளவு ஆகியன குறிக்கப்படுவதோடு சில கல்வெட்டுகளில் அவற்றின் உயரமும் எடையும் குறிக்கப்பட்டுள்ளன. "சாணேய் இருவிரல் உசரத்தில் நிலை விளக்கு" ஒன்று, மன்னார்கோயில் கோபாலசாமிக்கு வழங்கப் பட்டமை அக்கோயில் மண்டபத்தின் படிக்கட்டுக் கல்வெட்டிலிருந்து தெரிய வருகிறது.[1] இதே போன்று சிவப்புரி சுயம்பிரகாசர் கோயில் கல்வெட்டொன்று "ஐம்பதின் பலத்தால்" நிலை விளக்கொன்றளிக்கப்பட்ட செய்தியினை அறிவிக்கிறது.[2] திருநொந்தா விளக்கொன்றும் தரா இடை நாற்பதால் தவிச்சமாகவும் தன்னை அணைஞ்சு நிற்க வார்த்த சிறுநிலை விளக்கும்" பற்றிய குறிப்பினை ஆத்தூர் சோமநாதர் கோயில் அந்தராளத் தூணில் உள்ள கல்வெட்டு காட்டுகிறது.[3]

விளக்கு மட்டுமன்றி விளக்கிற்குப் பயன் படுத்தப்பட்ட "திரி"யைப் பற்றிய செய்திகளையும் கல்வெட்டில் காணலாம். "வைத்த விளக்குத் திரிக்குக் காசு அரை" யினைத் தாங்கள் பெற்றுக் கொண்டதாகச் சிவபிராமணர்கள் கூறும் செய்தி, ஆத்தூர் சோமநாதர் கோயில் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[4] "திருநொந்தா விளக்குக்குக் கொண்ட காசு பதினஞ்சும், திரியிடக் கொண்ட காசு ஒன்றும், ஆக கொண்ட காசு பதினறும் கொண்டு இத்திருநொந்தா விளக்கு சந்திராதித்தவற் முட்டாமல் செலுத்துவோமாக" என்று உறுதியளிக்கிறது. அம்பாசமுத்திரம் திருமூலநாதர் கோயில் கல்வெட்டொன்று.[5]

கோயிலுக்கு விளக்கும், விளக்குத் திரியும் ஈந்தவர்கள் விளக்கெரிய நெய்யும், வார்த்துள்ளனர். அனுதினமும் விளக்குக்கு நெய்யட்டி வருவதற்காக இவர்கள் வழங்கிய பொருட்களைக் கீழ்வருமாறு அட்டவணைப் படுத்தலாம். பெரும்பான்மையான நொந்தாவிளக்குக் கொடைகள் அட்டவணை காட்டும் அளவு முறையிலேயே அமைந்திருப்பது நோக்கத்தக்கது. எடுத்துக்காட்டாகச் சில கல்வெட்டுக்களை அட்டவணைப் படுத்திக் காண்போம்.

| வரிசை எண் | நித்தம் அட்டப்படும் நெய்யின் அளவு | நெய்க்காக வழங்கப்பட்ட பொருள் | பொருளின் அளவு அல்லது எண்ணிக்கை | மன்னன் | ஆட்சி ஆண்டு | கி. பி. நூற்றாண்டு | சான்றுக் குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | உழக்கு | ஆடு | 50 | மாறஞ்சடையன் | 35 | 9 | S.II. V. XIV எ. 36 |
| 2. | .. | .. | .. | சடையமாறன் | 2+9 | 9 | எ. 58 |
| 3. | .. | .. | .. | ஜடாவர்மன் ஸ்ரீவல்லபன் | 1 [1] | 12 | எ. 230 |
| 4. | – | எருமை | 5 | சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன் | 15 | 10 | எ. 93 |
| 5. | .. | .. | 6 | சடையமாறன் | 2+9 | 9 | எ. 58 |
| 6. | .. | எருமை நாகு | 2 | ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன் | 6 | 11 | எ. 135 |
| 7. | .. | பசு | 25 | மாறவர்மன் விக்கிரமசோழன் | 22 | 11 | எ. 141 |
| 8. | .. | காசு | 12 | மாறவர்மன் விக்கிரமசோழன் | 25 | 11 | எ. 60 |
| 9 | .. | .. | 13 | சடையமாறன் | 2+9 | 9 | எ. 190 |
| 10. | உழக்கு | காசு | 15 | ஜடாவர்மன் சுந்தா சோழ பாண்டியன் | — | 11 | எ. 140 |
| 11. | .. | கிரமம் | 100 | ஜடாவர்மன் ஸ்ரீவல்லபன் | 2 | 12 | எ. 1: |
| 12. | .. | நெல் | 78 கலம் | மாறவர்மன் விக்கிரம சோழ பாண்டியன் | 22 | 11 | எ. 186 |
| 13. | ஆழாக்கு | காசு | 6 | சடையமாறன் | 2+9 | 9 | எ. 60 |
| 14. | .. | ஆடு | 20 | ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன் | 16 | 11 | எ. 155 |
| 15. | .. | .. | 25 | ஸ்ரீவல்லபன் | 2 | 12 | எ. 199 |
| 16. | உழக்காழாக்கு | .. | 75 | சோழன் தலைகொண்ட கோவீரபாண்டியன் | 3+4 | 10 | எ 79 |
| 17. | .. | செம்மறியாடு | 50 | ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டின் | 17 | 11 | எ. 158 |
| 18. | நாழி | காசு | 60 | — | 4+1 | 9 | எ. 12 |
| 19. | உரி | பசு | 50 | சடையமாறன் | 2+1 | 9 | எ 51 |
| 20. | .. | ஆடு | 100 | ஸ்ரீவல்லபதேவர் | 17 | 12 | எ. 240 |
| 21. | .. | பசு + ஆடு | 12+50 | கோச்சடையமாறன் | 2+1 | 9 | எ 49 |

இந்த அட்டவணையிலிருந்து சில உண்மைகள் வெளிப்படை. மாறஞ்சடையன் காலந்தொடங்கி ஜடாவர்மன் ஸ்ரீவல்லபன் காலம் வரைக்கும் பாண்டியராட்சியில் பொருட்களின் மதிப்பீட்டில் மாற்றங்கள் அவ்வளவாக இல்லை. எனவே ஒருவாறு அன்றைய நிலையில் இருந்த பொருட்களின் மதிப்பீட்டினைக் கீழ் வருமாறு ஒரு வாய்ப்பாட்டிற்குட் படுத்திக் கூறி விடலாம்.

| | | |
|---|---|---|
| 2 திரமம் | = | 1 ஆடு |
| 2 செம்மறி ஆடுகள் | = | 3 ஆடுகள் |
| 2 ஆடுகள் | = | 1 பசு |
| 5 பசுக்கள் | = | 1 எருமை |
| 5 எருமை | = | 78 கலம்நெல் |
| [illegible] கலம்நெல் | = | 1 காசு |

இந்த மரபுக்கு விலக்காகவும் சில கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. திருநெல்வேலி மாவட்டம் திருவாலீசுவரம் வாலீசுவரர் ஆலய வடக்குச் சுவரில் இப்படியொரு கல்வெட்டு காணப்படுகிறது. "இடையன் அஞ்சி காரிசணன் அட்டகடவ நெய் உழக்கினு[க்]கு கொண்ட எருமை கூட்டு."[6] வழக்கப்படி உழக்கு நெய்யட்டும் விளக்கிற்காக வழங்க வேண்டிய எருமைகள் ஐந்து அல்லது ஆறு. ஆனால் இங்கு சுட்டப்படும் எருமைகளோ முப்பத்தைந்து.

விளக்கு, விளக்குத்திரி, எரிபொருள், நெய்க்காக வழங்கப்பட்ட பிற பொருட்கள், அவற்றின் மதிப்பீடு ஆகியவற்றிற்கு அடிகோலிய கல்வெட்டுக்கள், அன்றைய வட்டி முறை பற்றித் தெரிந்து கொள்ளவும் பயன்படுகின்றன. "ஸ்ரீ பண்டாரத்தில் ஒடுக்கின திரமம் நூறு. இத்திரமம் நூறும் முதல் முதலே முதலுக்கு சேதமின்றியேய் சந்திராதித்தவற் நிற்பதாகவும், மாஸத்திரண்டு திரமம் பலிசை பொலிவதாகவும் இப்பலிசைத் திரமம் இரண்டாலுமேய் சந்திராதித்தவற் நித்தம் உழக்கெண்ணே இரு நுந்தா விளக்கெரிவதாகவும்" என்கிறது கல்வெட்டு.[7]

வட்டிப் பணம் மட்டுமின்றி நாட்டு வரிப் பணமும் விளக்கெரிப்பதற்காகப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. "திருக்கோட்டியூர் நாயனார் சொக்கனாராயணர் திருமுன்பு நாங்கள் வைத்த திருநந்தா விளக்கு இரண்டுக்கு நாள் முப்பது வட்டத்து நெய் இருப[து] நாழி ஆக [வை]த்த நெய்க்கும் இது இடுகிற சொக்கநாராயணன் சி[று]க்கற்கும் ஆண்டு ஒன்றுக்கு நூறு ப[ண]ம் எங்கள் நாட்டு வரியுடனே கூட நாட்டு விநியோகமாக வைத்துக் குடுப்போமாகவும்" என சோழ பாண்டிய வளநாட்டு நாட்டவர் செம்பிலும் கல்லிலும் உறுதிமொழி வெட்டிக் கொடுத்தமை இதற்குச் சான்று.[8]

விளக்கேற்றி வைத்த பெரியவர்கள் அதன் வெளிச்சத்தில் தங்களது உள்ளத்தை—அதன் உந்தலில் உதித்தெழும் பழக்கநெறிகளை—பழக்கநெறிகளால் பண்படுத்தப்படும் மரபு முறைகளை—இன்னும் இது போன்று தங்களின் பின்னேரும் கண்டறிய உலவவிட்டிருக்கும் பாங்கு எண்ணி இறும்பூதெய்தற்குரியது.

1. S. I. I. Vol XIV No: 150; Page: 80
2 S. I. I. Vol XIV No: 222; Page: 126
3. S. I. I. Vol XIV No: 230; Page: 134
4. S. I. I. Vol XIV No: 230; Page: 134
5. S. I. I. Vol XIV No: 140; Page: 72
6. S. I. I. Vol XIV No: 141; Page: 73
7. S. I. I. Vol XIV No: 198; Page: 113
8. S. I. I. Vol XIV No: 233; Page: 137

# இராஜராஜன் கண்ட விற்போர்



செல்வி நா. மார்க்சிய காந்தி, M.A., Dip. Epgy. & Arch.
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

மன்னர்கள், பலவீர விளையாட்டுப்போட்டிகளை நடத்துவித்து, ஊக்கம் அளிப்பதும், பரிசுகள் கொடுத்து மகிழச்செய்வதும் தொன்று தொட்டு வரும் மரபு. அத்தகைய நிகழ்ச்சிகளையே, வீரர்கள் தங்களுக்குள் ஏற்படும் சவாலாக ஏற்று வெல்வதும் உண்டு. ஏறுதழுவி, மணப்பெண்ணைப் பெறுவது கூட, வீரவிளையாட்டுக்களுள் ஒன்றே. இத்தகைய விளையாட்டுக்களில், மற்போர், விற்போர், வாட்போர் ஆகிய அனைத்தும் நிகழ்ந்திருத்தல் வேண்டும். இதுபோன்ற மரபினைப் பெரியபுராணத்தில் ஏனாதிநாதர் வரலாறும் தெரிவிக்கிறது. இத்தகைய ஒரு நிகழ்ச்சியினையும், அது தொடர்பாக செய்த தானத்தையும் குறிக்கும் அருமையான கல்வெட்டொன்று கிடைத்துள்ளது.

தஞ்சை மாவட்டத்தில், தஞ்சைக்கு அருகில் உள்ள கரந்தையென வழங்கப் பெறும், கருந்தட்டான் குடியில் சிவன் கோயிலின் கருவறை மேற்புறச்சுவரில் உள்ள கல்வெட்டு அது. இராஜராஜ சோழனின் இருபத்து நான்காம் ஆட்சி ஆண்டில் அதாவது ஆயிரத்து ஒன்பதாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு இது.

இருவீரர்கள் விற்போர் புரிந்தனர். அவர்களுள் ஒருவன், குதிரைச் சேவகன். அவன் பெயர், அரங்கன்காரியானசோழவிச்சாதர முத்தரையன். அவன் பணிபுரியும் படையின் பெயர், இராஜராஜ தேவர் சிறுதனத்து சிங்களாந்தகத் தெரிஞ்ச குதிரைச் சேவகர் படை. மற்றொருவன் பெயர் காரிக்குளிப்பாகை; அவனது படையின் பெயர், மனைப்படை திருமுடி சோழ வீரர்படை. இவ்விருவருக்கும் விற்போர் நடந்தது. அப்போர், இராஜராஜனின் முன்னர், நேரடிப்பார்வையில் நடந்தது. போரில் சோழ விச்சாதர முத்தரையன் எறிந்த வில், காரிக்குளிப்பாகையின் தோளைத் துளைத்துக்காரிக் குளிப்பாகை இறந்து பட்டான்.

இறந்த காளிக்குளிப்பாகையின் உறவு முறையினராகிய கண்டன் காரி, கண்டன் பொற்காரி, குட்டி பொன்னுடை ஆகியோர், அவனுக்காக நொந்தா விளக்கு அளித்தனர் என்று கல்வெட்டு குறிக்கின்றது. ஆயின் தாம் 'திருந்தி' விளக்கிடுவதாகக் கூறுகின்றனர். எனவே, காரிக்குளிப்பாகை இட்ட போர் சரியான முறையுடன் கூடியதாக இல்லை போலும்! அவனை தூண்டி போரிடச் செய்ததில், விளக்கிட்ட மூவரும் பங்கு கொண்டிருத்தல் வேண்டும். ஆனால் அவன் இறந்த பின்னர், தாம் செய்தது தவறென எண்ணினர். எனவே தாம் திருந்தி விட்டதையும் கல்லில் பொறித்து வைத்தனர்.

மூவரில் முதல்வன் காரிகுளிப்பாகையின் உறவு முறை கடவான் காரி நகத்தின் மகன் கண்டன்காரி. அடுத்தவன் காரிக் கொற்றத்தின் மகன் கண்டன் பொற்காரி. மூன்றுமவன் இவனது கொழுந்தன் குட்டி பொன்னுடை என்பான்.

இப்போர் இராஜராஜனின் முன்னிலையிலேயே நடந்தது என்பது குறிப்பிடத் தக்கது. மாபெரும் மன்னன், இது போன்ற போட்டிகள் நடைபெறும் போது முன்னின்று நடத்துவித்து இருக்கிறான். தன் வீரர்களை ஊக்குவிப்பதில் அவனுக்கு அவ்வளவு ஆர்வம். போர் நடந்ததையும், இராஜராஜன் கண்டமையையும் கல்வெட்டு குறிக்குமாறு:

"ஸ்ரீராஜராஜதேவர் சிறுதனத்து சிங்களாந்தகத் தெரிஞ்ச குதிரைச் சேவகரில் அரங்கன் காரியான சோழ விச்சாதர முத்தரையனோடு
மளயப் படை இரு முடி சோழ வீரரில் காரிக் குளிப்பாகை
ஸ்ரீராஜராஜ தேவர் காண
வில்லேகத் தோள் எய்து
காரிக் குளிப்பாகை பட்டமையில்
இவனுக்கு உறவு முறைகடவான் காரிநகத்தின் மகன் கண்டன் காரியும்
காரிக் கொற்றத்தின் மகன் கண்டன் பொற் காரியும்
இவன் கொழுந்தன் பொன்னுடையும் உள்ளிட்டாரும்
திருநந்தி இச்ஸ்ரீ கோயில் மகாதேவர்க்கு வைத்த நொந்த விளக்கு".

பண்பாட்டு வரலாற்றில் ஒரு புதிய செய்தியைக் குறிக்கும் இக்கல்வெட்டை நேரில் படித்த போது எடுத்தபடி இது.

---

## குலோத்துங்கர் சனநாதன்

"மலைகொண்டு தூர்க்குங் கடலை படலுடை வாளரக்கர்
தலைகொண்டு தாக்கு மிலங்கா புரத்தைத் தளிரியலார்
கலைகொண்டு தூர்க்கும் நுகை விசும்பைக் கமுகுசெய்ய
காலைகொண்டு தூர்க்கும் புகார்ச் சனநாத குலோத்துங்கனே"

டாக்டர் [redacted] உ. வே சாமிநாதய்யர் அவர்களின் தனிப்பாடல் தொகுப்பில் இடம் பெறுகிறது இப்பாடல். இப்பாடலில் குலோத்துங் கனுக்குச் சனநாதன் என்ற பட்டப்பெயர் குறிப்பிடப்படுகிறது. சோழர் பரம்பரையில், முதலாம் இராஜராஜனுக்கும் முத்தமிழுக்கும் தலைவனான இரண்டாம் இராஜராஜனுக்குமே சனநாதன் என்ற பெயர் உண்டு என்று கல்வெட்டுகளும், இலக்கியங்களும் குறிக்கின்றன. ஆனால் இப்பாடல்மூலம் வேறெந்த இலக்கியங்களோ, கல்வெட்டுகளோ தெரிவிக்காத செய்தியை- குலோத்துங்கனுக்கும் 'சனநாதன்' என்ற பெயர் உண்டு என்பதை அறிகின்றோம். இப்பாடல் எந்த இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது என்பது தெரியவில்லை. இதுவரை அச்சிடப்பட்டதாகவும் தெரியவில்லை.

நன்றி - உ. வே. சா. நூலகம், திருவான்மியூர்.

# அணிகள்

**வை. கணபதி தபதி**

*தலைவர், அரசினர் சிற்பக் கலைப் பள்ளி, மாமல்லை.*

தமிழ்நாட்டுப் பெண்மணிகளுக்கு அணிகள் மீதுள்ள நீங்காத பற்று யாவரும் அறிந்ததே. தலையை வாரிக் கொண்டையாகவும், பின்னலாகவும் பல்வேறு கோலங்களில் அலங்கரித்துக் கொள்வதுடன் அதில் அழகுமிக்க அணிகளையும் பூட்டி அழகு பார்ப்பதில் தனியின்பம் காண்போர் தமிழ்மக்கள். கழுத்திலும், காதிலும், மார்பிலும், தோளிலும், கையிலும், விரல்களிலும், இடுப்பிலும், தொடையிலும், காலிலும், தாளிலும் இடத்திற்கேற்ப அணிகளையும் பொன்னாலும், வெள்ளியினாலும், இரத்தினங்கள் பதித்த பிற அணிகளாலும் தங்களை அலங்கரித்துக்கொள்கின்றனர்.

பண்டையத் தமிழ்நாட்டில் தமிழ் மக்கள் விரும்பி அணிந்த அணிகளில் சிறப் பானவற்றை மாதவியென்ற நாட்டிய மகள் அணிந்திருந்ததாகக் கூறி அணிகளின் பெயர்களையும், அணியப்பட்ட இடத்தையும் இளங்கோவடிகள் தமது வரலாற்றுக் காப்பியமான சிலப்பதிகாரத்தில் விரிவாக எடுத்துரைக்கின்றார். அணிகளுக்கு இடப் பட்ட பெயர்கள் மிக அழகிய பெயர்கள். மக்கள் அணிந்த அணிகளைச் சிற்பிகள் தெய்வீக வடிவங்களிலும் பிற சிற்பங்களிலும் செதுக்கி வைத்து இன்று எல்லா அணிகளையும் நாம் கண்டறியும் வண்ணம் செய்திருக்கிறார்கள்.

தலையில் அணியும் ஆபரணங்களில் 'தொய்யகம், புல்லகம், பூரப்பாளை, வலம் புரிச்சங்கு' ஆகியவை முக்கியமானவை. பெண்களின் நேர் வகிடின் மீது படிந்து நெற்றியின் விளிம்பிலிருந்து அரசிலை வடிவமாகவும், நடுவில் சிவப்பு மணி பதிக்கப் பட்டு அதன் விளிம்பில் சித்திர வேலைப்பாடுகளோடு கூடிய தொங்கலுக்கு "தொய்யகம்" என்று பெயர். இதனை தெய்வ உத்தி என்றும், சீதேவி என்றும் அழைப்பர். அத்தொய்யகம் தலை உச்சியோடு ஒரு தொடரால் இணைக்கப்பட்டி ருக்கும். இதனைப் பூரப்பாளை என்றும் தலைப்பாளை என்றும் கூறுவர். இப் பூரப்பாளை உச்சந்தலையில் அணியப்பட்டிருக்கும். வலம்புரிசங்கு என்ற அணியோடு பிணைக்கப் பட்டிருக்கும். தலையின் இரு பக்கங்களில் பூச்சூட்டி போன்ற இரு அணிகள் சூட்டப் படுகின்றன. இவற்றைத் தென்பல்லி, வடபல்லி என்று கூறுவர். இவை இரண் டிற்கும் பொதுப்பெயர் புல்லகம். தலையோடு ஒட்டிக்கொண்டிருப்பதால் புல்லகம் என்ற பெயரைப் பெறுகிறது. 'சூளாமணி' என்ற ஒரு அணியும் ஒருவகை தலை அணி ஆகும். இது வட்ட வடிவமானது. இரத்தினங்கள் பதிக்கப்பட்டது. அதன் நடுவிலிருந்து பூரப்பாளை வடிவில் ஒரு தொங்கல் அசைந்தாடும் தன்மையுடையதாய் அமைக்கப்பட்டிருக்கும். இத்தொங்கல் இன்றியும் அமைக்கப்படுவது உண்டு. இதுவே சூளாமணி எனப்படும்.

காதுகளில் பனை ஓலையைச் சுருட்டித் தொங்கிய காதில் அணிபெற அமைக்கப் படுகிறது. இது குதம்பை என்று சொல்லப்படுகிறது. இதன் நடுவில் நீலத்தாமரை சொருகி வைக்கப்படுமானால் அது நீலக் குதம்பை என்று சொல்லப்படும்.

கழுத்திலே சவடி, சரப்பளி, முத்தாரம் ஆகிய அணிகள் அணியப்படுகின்றன. இவ்வாபரணங்களைச் சுற்றி மார்பிலும், உடலிலும் ஒரு மூலையிலிருந்து எதிர்மூலைக்கு குறுக்கே செல்லும் சங்கிலிக்கு வீரசங்கிலி என்று பெயர். இதனைச் சங்கிலி என்றும்

சொல்வதுண்டு. மணிகள் கோத்து மேற்கையின் நடுவிடத்தில் அணியப்படும் ஆபரணம் தோள் வளை என்று சொல்லப்படும். மூன்று வளையங்களோடு கூடியதாகவும் ஒரு நுனியில் இலைகளும், பூக்களும் நிறைந்த சித்திர வேலைப்பாடுடன் கூடியதாகவும் உள்ள ஒரு அணியையும் மேற்கையில் அணிவதுண்டு. இதனையும் தோள் வளையென்று சிற்பிகள் சொல்கிறார்கள். முழங்கையைச் சுற்றி வளையமாக அணியப்படும் அணிக்குக் கடகம் என்று பெயர். கடயம் என்றும் சொல்வதுண்டு. மணிக்கட்டுக்கு அருகில் அணியப்படும் வளையல்கள் ஐந்து வகைப்படும். அவை முறையே சூடகம், செம்பொற்கைவளை, பரியகம், வால்வளை, பவழவளை ஆகும். சூடகம் என்பது பலவித சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததும் வைரம் பதித்ததும், பிறமணிகள் அழகுற அமைந்ததும் ஆன ஒரு சிறப்பான கைவளை ஆகும். பரியகம் என்பது முத்துக்கள் கோத்த கைவளை ஆகும். வால்வளை என்பது வெள்ளி அல்லது சங்கினால் செய்யப்பட்ட வளையாகும். பவழப்பல்வளை என்பது பவளக்கொடியை வளையாகக் கொள்வதாகும். அல்குல் தடத்தை மறைத்து



பிணங்கள் இடு காடுஅதனுள் நடம் ஆடுபின்னைகனோடு
இணங்கு திருச் சக்கரத்து எம்பெருமானார்க்கு இடம், விசும்பில்
கணங்கள் இயங்கும் மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வணங்கும் மனத்தார்அவரை வணங்கு, என்தன் மடநெஞ்சே.

மேகலை என்ற ஆபரணம் அணியப்படுகிறது. இதனை விரிசிகை என்று கூறுவர். இது முப்பத்திரண்டு வடத்தினால் செய்யப்பட்டு பல முத்துக்கள் கோர்க்கப்பட்டு முத்து வடன் என்றும் முத்தரை என்றும் அழைக்கப்படுகிறது. இதற்குக் கீழே தொடையில் பல தொங்கல்கள் கவான் வடிவத்தில் அணியப்படுகின்றன. இதற்குக் குரங்குச் செறி என்று பெயர். கால் நளகைக்கு அருகில் இரண்டு, மூன்று, ஐந்து அடுக்குகள் கொண்ட தண்டைகளின் சேர்க்கை போல் தோற்றமளிக்கும் ஆபரணத்திற்குப் பாடகம் என்று பெயர். காலில் அணியும் சிலம்பிற்கு நூபுரம் என்று பெயர். பரியகம் என்பது கால் அணிகளில் கார் சாவடியாகும். பாதசாலத்திற்கு அரியகம் என்று பெயர். இவற்றோடு சதங்கை என்ற ஆபரணமும் பாதத்தில் அணியப் படுகிறது.

கைவிரல்களில் பலவகை மோதிரங்கள் அணியப்படுகின்றன. அவற்றில் வாளை மீன் போன்ற அமைப்புடைய மோதிரம் சிறப்பாகக் கூறப்படுகிறது. இதனை வாளைப் பகுவாய் மோதிரம் என்றும், முடக்கு மோதிரம் என்றும் அழைப்பர்.

மானசாரம் என்ற சிற்ப நூலில் தலை அணிகளைப்பற்றி மிக விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. தலை அணியை மகுடம் என்றும், மௌலி என்றும் குறிப்பிட்டு எட்டு வகையான தலை அலங்காரத்தைக் குறிப்பிடுகிறது. இவை தெய்வீக வடிவங்களுக்கும், அரசர்களுக்கும், அரசிகளுக்கும் ஏற்றவையென்று சுட்டிக்காட்டுகிறது. எட்டு வகையான தலை அணிகள் முறையே 'ஜடா மகுடம், கிரீட மகுடம், கரண்ட மகுடம், சிரஸ்த்ரகம், குந்தளம், கேசபந்தம், தம்மில்லம், அளகசூடகம், ஆகும்.

நமது சிற்பம் வடிவங்களில் ஜடாமகுடத்தைப் பல்வேறு வகையான அமைப்புக்களில் காணலாம். அதேபோல் கிரீடமகுடம், கரண்ட மகுடம், கேசபந்தம் ஆகியவை பலப்பல அமைப்பில் காட்டப்பட்டிருக்கின்றன. ஜடை அலங்காரத்திலேயே பலவித விரிவுகளும் தோன்றியிருக்கின்றன. எடுத்துக்காட்டாக ஜடையை மகுடமாகக் காட்டாமல் விரிந்த பாவனையில் ஜடாமண்டலமாகவும், தொங்கிய பாவனையில் ஜடா பாரமாகவும் காணலாம். கிரீடமகுடத்தில் இரத்தினக்கிரீடமென்றும், சர இரத்தினக் கிரீடமென்றும் இருவகைக் கிரீடங்களைச் சிற்பங்களில் காணலாம். கேசபந்தம் என்ற தலைக்கோலம் கவர்ச்சியான தோற்றங்களில் பாரிய கேசத்தோடும் சுருண்ட கேசத்தோடும் அமைக்கப்படுகின்றன.

சிரஸ்த்ரகம் என்பது நீர்க்குமிழிகள் போல் முடியில் அமைக்கப்பட்டிருக்கும் கொண்டையாகும். புத்தரின் தலையலங்காரத்தை இவ்வகை மகுடத்திற்கு எடுத்துக் காட்டாகக் காணலாம். குந்தளம் என்பது கொண்டை என்ற தலைக்கோலமே. இது நேரியதாகவும், பக்கவாட்டில் சரிந்ததாகவும், பின்புறத்தில் தூக்கி கட்டியதாகவும் அமையும். தம்மில்லம் என்பது கொடி போன்று முறுக்கிக் கட்டப்பட்ட கொண்டையாகும். ஏதைச் சிற்ப வடிவத்தில் இத்தகைய தலைக்கோலத்தைக் காணலாம். நெற்றியை ஒட்டிச் சுருண்டு கிரண்ட கேச அமைப்பிற்கு அளக சூடகம் என்று பெயர். வண்டுகளின் வடிவில் இவை அமைவதால் இதனை பிரமரகம் என்று சிற்பிகள் கூறுவர்.

நெற்றியின் மேல் விளிம்பில் மூன்று விதமான பட்டங்களைச் சிற்ப வடிவங்களில் அமைத்துக்காட்டுவதுண்டு. அவை முறையே பத்திரப்பட்டம், இரத்தினப் பட்டம், புஷ்பப் பட்டம் என்று சொல்லப்படும். பூச்சித்திர வேலைப்பாடுகள் நிறைந்து காணப்படுவது பத்ர பட்டம் என்றும், இரத்தினங்கள் பதித்த தொங்கல்களும் முத்துச்சரங்களோடு கூடியதுமான பட்டத்தை இரத்தினப்பட்டம் என்றும், புஷ்ப மாலையைப் பட்டமாகக் கட்டுவதனால் புஷ்பப்பட்டம் என்றும் சொல்லப்படுகின்றன.

மகுடங்களின் தோற்றத்தை மிகைபடக் காட்டும் சிறப்பான அணி ஒன்றுண்டு. அதனைப் 'பூரிமம்' என்று சிற்பிகளும், சிற்ப நூல்களும் கூறும். இது அரசிலை போன்ற தோற்றமுடையது. அடிப்பகுதியில் இரு மகரங்கள் இதனை அணிசெய்யும். இதன் மேற்பகுதியில் நீண்ட வட்ட வடிவில் அடுக்கு அடுக்காகக் குறுக்கு வேலைப்பாடுகள் அமையப் பெற்று, நடுவில் சிவப்பு அல்லது பச்சை அல்லது நீலம் பதிக்கப் பட்டிருக்கும். தலைப்பகுதியில் ஐந்து அல்லது ஏழு அல்லது ஒன்பது மலர்ந்த பூக்கள் அணி பெற ஏற்றத்தாழ்வோடும் அரசிலை வடிவத்தில் அமையுமாறும் வரிசையாகத் தைக்கப் பட்டிருக்கும். இடை இடையிடையே முத்துச் சரங்கள் தொங்கும். இதனையே



மாமல்லபுரத்துக்கு அருகில் சாளுவன்குப்பம் என்றொரு இடம் உள்ளது. அங்கு புலிக்குகை என்று கூறும் குகைக்கருகில் மற்றொரு குடைவரைக்கோயில் இருக்கிறது. அங்கு சிம்மத்தின் மீதமர்ந்து மகிஷாசுரனை ஓடத்துரத்தி அழித்த நங்கையாக கொற்றவையினுடைய சிற்பம் படைக்கப்பட்டுள்ளது. மாமல்லபுரத்துக் கலைச் சிற்பங்களில் இதுவும் ஒன்று. இதுபோன்ற பல கலைப் படைப்புகளைத் தன்னுள் அடக்கிச் சிறந்துள்ள மாமல்லையின் வரலாறுபற்றி அறிய இத்துறை வெளியீடு 'மாமல்லை' by இரா. நாகசாமி. விலை ரூ. 1-50.

'பூரிமம்' என்று சிற்பிகள் கூறுவர். மகுடத்தின் நான்கு புறத்திலும் உச்சந்தலையை ஒட்டிச் சுற்றிலும் அமைக்கப்படும். மகரகுண்டலம், பத்ர குண்டலம் என்பவை சிற்பப் படிமங்களின் காதுகளில் அணியும் சிறப்பான அணிகளாகும். இவற்றைச் சிற்பிகள் பலவகையான தோற்றங்களில் கவர்ச்சிகரமாக அமைத்துச் சிற்ப வடிவத்தின் முகத்தோற்றத்தைச் சிறக்கச் செய்கிறார்கள். இதை விடுத்து சிம்ம குண்டலம், வியாழ குண்டலம் ஆகியவை சிவனது காதுகளில் அணியப்படும் அணிகளாகும். தாடங்கம்என்ற தோடு பெண் வடிவங்களின் காதணிகளில் ஒன்றாகும்.

முகத்திற்கு அழகு ஊட்டுவன கண்களும், மூக்கும், உதடுகளும் ஆகும். அவற்றில் முன்னிரண்டும் மிக முக்கியமானவையென்று சிற்ப இலக்கணம் வலியுறுத்தும். நீண்ட கண்களும், எடுப்பான மூக்கும் அழகியவை என்பது கருத்து. மூக்கிலே அணி பூட்டுவது இயற்கைப் பெண் வடிவத்தில் அழகு தருவதாயினும், அது இல்லாதிருப்பது அதைக்காட்டிலும் அழகு தரும் என்பது சிற்பியர் கருத்து; நமது மரபுமாகும். எனவே, சிற்பங்களில் தனித்து அணிகளைப் பெரும்பாலும் மூக்கில் அமைப்பதில்லை.

கழுத்தில் அணியும் அணிகளில் உபக்கிரீவம், ஹாரம், ஹிருதயமாலை ஆகியவை முக்கியமானவை. கழுத்துக்கு அருகிலிருந்து இரு பக்கங்களிலும் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட இரு மாலைகள் அணியப்படுகின்றன. இவற்றை 'ஸ்கந்த மாலை' என்று கூறுவர். மார்பின் இரு பக்கங்களிலும் விரிந்து கழுத்தின் பின்புறமாகவும், மார்பிலிருந்து நடு உடலில் சந்தித்து மீண்டும் பக்கங்களில் விரைந்து முதுகின் நடுவிடத்தில் ஒன்று சேர்த்துக் கட்டப்படும் அணியைச் சன்னவீரம் என்று சிற்பிகள் கூறுவர். மேலும் இடது தோள் புறமிருந்து வலது இடுப்பு வழியாக உடலில் குறுக்கே மூன்று பிரிவுகள் உடைய நூலை 'யக்ஞ சூத்திர' மென்று சொல்கிறோம். இருதயத்திற்குக் கீழே நாபிக்கு மேலே வயிற்றைச் சுற்றியவாறு அலங்காரமாக அணியும் அணி, உதரபந்தம் எனக் கூறப்படும். மேற்கையில் நடுவிடத்தில் கேயூரமென்ற அணியும், முழங்கைக்கு அணித்தே கடகவளை என்ற அணியும், மணிக்கட்டுக்கு அருகில் கைவளைகளும், விரல்களில் மோதிரங்களும் அணியப்படுகின்றன. நாபிக்குக் கீழே இரத்தினங்கள் பதித்ததும், முத்துக்கள் நிறைந்ததும் கறுக்கு வேலைப்பாடுகள் பொருந்தியதுமான முகப்புக்களையுடைய கடிசூத்திரங்களைச் சிற்ப வடிவங்களில் காணலாம். முகப்பு அலங்காரத்தில் கற்பனை நிறைந்ததும் சிம்மமுகத்தைப் பெருமளவில் ஒத்திருப்பதும் ஆன ஒரு வகையான முகப்பு இக்கடி சூத்திரத்தோடு இணைக்கப்படும். இதனைக் 'கீர்த்தி முகமென்றும், கிருத்திமானனம் என்றும் சிற்பிகள் கூறுவர். இவற்றிற்குக் கீழே பூச்சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த பட்டைகள் அணியப்படும். அவற்றையொட்டி முத்து மாலைகள் பலவித அமைப்புகளில் தொடையை ஒட்டித் தொங்கும். இவை ஊருதாமம் என்று சொல்லப்படும். கெண்டைக்காலின் அடியிலே கணுவுக்கு மேலே தண்டை போன்ற அமைப்புடையதும், இரண்டு, மூன்று அல்லது ஐந்து அடுக்குகளோடு கூடியதும் இடைவெளியின்றி ஒன்றோடொன்று சேர்ந்ததுமாக அமைந்த அணி அவ்விடத்தை அலங்கரிக்கிறது. இது புஜங்க கடகம் என்று சொல்லப்படும்.

---

## அவளும் வீழ்ந்தாள்

சின்னேரி மோட்டுப்பட்டியில் (தருமபுரியிலிருந்து 12 கி. மீ. தொலைவு) ஒரு நடுகல்லை இத்துறை கண்டுள்ளது. மாற்றானை விற்போரில் வீழ்த்துகிறான் ஒரு மறவன். அவன் அருகிலே நின்று போர்புரிய உதவுகிறாள் மறத்தி. வீரன் அம்புகளைச் சரமாரியாக எய்த வண்ணம் நிற்க, சளைக்காது சரங்களை எடுத்துக் கொடுத்த வண்ணம் நிற்கிறாள் அப்பெண். கடும்போர். வீரம் விளைத்த இருவர் மார்பிலும், மாற்றானின் அம்புகள் ஒருங்கே பாய்ந்து துளைத்து வீழ்த்துகின்றன. அவனும் வீழ்ந்தான்; அவளும் வீழ்ந்தாள் அக்கணமே. காணுந்தொறும், நினைக்குந்தொறும் நெஞ்சம் விம்முகிறது. மாண்ட அவர் உருவும் புகழும் தாங்கி நிற்கிறது இந் நடுகல். உண்மையாகவே நடந்த நிகழ்ச்சி. 16-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் ★

# உஞ்சேனை மாகாளம்

பா. சூரியநாராயணன்,

அரசியல்-வரலாற்றுத்துறை, அழகப்பா கல்லூரி, காரைக்குடி

உஞ்சேனை மாகாளத்தைப் பற்றி பின்வரும் செய்தியை பேராசிரியர், டாக்டர் மா. இராசமாணிக்கனுர், தாம் எழுதியுள்ள '' பெரிய புராண ஆராய்ச்சி '' என்னும் நூலில்[1] கூறுகிறுர் :

'' உச்சைனி நகரத்தில் உள்ள மாகாளம் என்ற சிவனுர் கோவில். இது காளிதாசரால் சிறப்பிக்கப்பெற்ற பெருமை உள்ளது ''[2]

சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள், பதினேராம் திருமுறையைப் பாடிய 11 பேர்களுள் ஐயடிகள்காடவர்கோன் என்பவரும் ஒருவர்.[3] ஐயடிகள்காடவர் கோனைப் பற்றி அப்பேராசிரியர் கூறுவதாவது :

'' இவர் சிறந்த வடமொழிப் புலவர்; தமிழ்ப் புலவர்; மகனிடம் அரசை ஒப்பித்து, சிவத்தலயாத்திரை செய்து, தலத்துக்கொரு வெண்பா பாடியவர். இவர் வடமொழிப் புராணத்தில் சிம்ஹாங்க, பதம்சிம்ஹா, பஞ்சபத சிம்ஹா (Simhanka, Padasimha, Panchapadasimha) என்ற பெயர்கள் உடையவராகக் காண்கிறர். மேலும், இவர் மகன் பீமவர்மன் என்று அந்நூல் கூறுகிறது. பல்லவர் பட்டியலிற் பீமவர்மன், சிம்மவிஷ்ணு, இவர்தம் தந்தை மூன்றும் சிம்மவர்மன் என்பது காண்கிறது. எனவே, இவர் மூன்றும் சிம்மவர்மன் ஆகலாம் என்பது அறிஞர் கருத்து. அது பொருத்தமாயின் சிம்மவிஷ்ணுவின் (கி. பி. 575-615) தந்தையாரான இவர் காலம் ஏறக்தாழ கி. பி 550-575 எனலாம். ''[4]

மேலும் அவ்வாசிரியர் கூறுவதாவது :

'' ஐயடிகள்காடவர்கோன் என்று கருதப்படும் மூன்றும் சிம்மவர்மன் சிவத்தலயாத்திரை செய்து, தலம் ஒன்றுக்கு ஒரு வெண்பா வீதம் பாடினுர். அந்நூல் க்ஷேத்திர வெண்பா எனப்படும். இப்பொழுது அதன்கண் இருப்பவை 24 வெண்பாக்களே ஆகும். எஞ்சியவை அழிந்துவிட்டன. அச்சிதைந்த நூல் பதினேராம் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளமை முன்பே கூறப்பட்ட செய்தியாகும். அந்நூலில் குறிக்கப்பெற்ற சிவத்தலங்கள் பின்வருவனவாகும். (1) தில்லை, (2) குடந்தை, (3) ஐயாறு, (4) ஆரூர், (5) திருத்துருத்தி, (6) திருக்கோடிகா, (7) பாண்டவாய்த் தென் இடைவாய் (8) திருநெடுங்களம் (9) குழித்தண்டலை, (10) ஆனைக்கா (11) மயிலாப்பூர், (12) உஞ்சேனை மாகாளம், (13) வளைகுளம், (14) சாய்க்காடு, (15) திருப்பாச்சிலாசிராமம், (16) சிராமலை, (17) திருமழபாடி, (18) திருஆப்பாடி, (19) காஞ்சிபுரம், (20) திருப்பனந்தாள், (21) ஒற்றியூர், (22) திருக்கடவூர், (23) திருக்கடவூர் மயானம் என்பன. ''[5]

15-ஆவது சிவத்தலமாகக் குறிப்பிட்டுள்ள உஞ்சேனை மாகாளத்தைப் பற்றியே, பேராசிரியர் மா. இராசமாணிக்கனுர் உச்சைனி நகரத்தில் உள்ள மகாகாளம் என்ற

சிவனுர் கோவில், இது காளிதாசரால் சிறப்பிக்கப் பெருமை உடையது'', என்று தமது நூல் பக்கம் 104-ல் 6-வது அடிக் குறிப்பில் காட்டுகிருர்.

ஐயடிகள் காடவர்கோன், தாம் இயற்றியுள்ள க்ஷேத்திர வெண்பாவில் "நெஞ்சமே, உடல் முதுமையும், தளர்ச்சியும், நோயும் அடைந்து மற்றவர்களால் வெறுக்கப்படும் முன்பாக, நீ உஞ்சேனை மாகாளத்தில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானை நினைந்து வணங்குவாயாக'' என்ற கருத்தமைந்த வெண்பாவைக் கூறுகிருர்: அது வருமாறு :—

காளையர்கள் ஈளையர்கள் ஆகிக் கருமயிரும்
பூளையெனப் பொங்கிப் பொலிவழிந்து-சூளையர்கள்
ஓகாளஞ் செய்யாமுன் நெஞ்சமே உஞ்சேனை
மாகாளங் கைதொழுது வாழ்த்து.

(க்ஷேத்திர வெண்பா, பாடல்-13).

சுந்தரமூர்த்தி நாயனுர், தாம் பாடியுள்ள திருத்தொண்டத் தொகை, ஏழாவது பாடலில், ஐயடிகள் காடவர்கோனைப் பாடுகிருர்.

ஐயடிகள் காடவர்கோனுல் குறிப்பிடப்படும் உஞ்சேனை மாகாளம் என்பதை உச்சனி நகரத்திலுள்ள மகாகாளமென்ற சிவனுர்கோவில் எனவும், அது காளி தாசரால் சிறப்பிக்கப் பெற்ற பெருமை உடையது எனவும் பேராசிரியர் மா. இராசமாணிக்கனுர் கூறுகிருர்: கி. பி. 3-ஆம் நூற்றுண்டிலிருந்து கி.பி. 6-ஆம் நூற்றுண்டு வரை வடநாட்டை ஆண்ட குப்தப் பேரரசர்களுடைய (Gupta Emperors) பேரரசில் மேற்குப் பகுதியில் இருந்ததும், இரண்டாம் சந்திரகுப்தன் விக்கிரமாதித்தியனென்ற குப்தப் பேரரசனுடைய (ஏறக்காழ கி. பி. 375—415) தலைநகரமாக இருந்ததும், அவன் காலத்தவராகக் கருதப்படும் சிறந்த வடமொழி நாடக ஆசிரியரான காளிதாசர் என்ற புலவரால் வணங்கப்பட்ட சிவன் கோவிலை உடையதும், இப்பொழுது மத்தியப் பிரதேச மாநிலத்தின் மேற்கு மாவட்டங்களில் ஒன்ருன ஷாஜாப்பூருக்கு அருகில் இருப்பதுமான நகரம் உஜ்ஜெயினி என்ற நகர மாகும்; இந்த உஜ்ஜெயினி நகரத்தையே உச்சைனி என்றும், இதிலுள்ள மகாகாளம் என்ற சிவனுர் கோவிலையே உஞ்சேனை மாகாளமென்று ஐயடிகள் காடவர்கோன் பாடியுள்ளதாகவும் பேராசிரியர் கருதுகிருர்.

ஐயடிகள் காடவர்கோன் குறிப்பிடும் உஞ்சேனை மாகாளம் என்பதை "உச்சைனி" என்றே அல்லது "உச்சைனி மகாகாளம்'' என்றே கொள்ளுவதில் சில ஐயப்பாடுகள் தோன்றுகின்றன. காரணங்கள் பின்வருமாறு :

(1) க்ஷேத்திர வெண்பாவில் கூறப்பட்டுள்ள 23 சிவத்தலங்களுள் 22-உம் தமிழ் நாட்டிலும், பெரும்பாலும் சோழ நாட்டிலும், சில தொண்டை மண்டலத்திலும் இருப்பவை ஆகும். தில்லை, குடந்தை, ஐயாறு, ஆரூர், திருத்துருத்தி, (குற்றாலம், தஞ்சை மாவட்டம்). திருக்கோடிகா (தஞ்சை மாவட்டம்), ஆனைக்கா, திருநெடுங்களம் (திருச்சிக்கருகிலுள்ள தலம்), சிராமலை, திருமழபாடி, திருஆப்பாடி (குடந்தைக் கருகிலுள்ள தலம்), திருப்பனந்தாள், திருக்கடவூர், திருக்கடவூர் மயானம் முதலியவை இக்கால திருச்சி, தஞ்சை மாவட்டங்களாகிய சோழநாட்டில் இருப்பவை; மயிலாப்பூர், காஞ்சிபுரம், ஒற்றியூர் முதலியவை தொண்டை நாட்டிலிருப்பவை; பாண்டவாய்த் தென் இடைவாய் என்பது, பாண்டவாய் என்ற ஆற்றின் தென் கரையில் உள்ள இடைவாய் என்ற தலமாகுமென்று கருதப்படுகிறது. வளை குளம் என்ற தமிழ்ப் பெயரை உடைய ஊர் வடநாட்டில் இருப்பதாகக் கருத இடமில்லை. எனவே 23-இல் 22 தலங்கள் தமிழ் நாட்டில் காணப்படு

கின்றன. இதனைக் காணும்போது, இவற்றுள் ஐயடிகளால் குறிப்பிடப் படும் உஞ்சேனை மாகாளம் என்ற தலம் மட்டும் வடநாட்டில் உள்ள உச்சைனி மகாகாளம் என்ற தலத்தைக் குறிப்பதாகக் கொள்ளுதல் பொருந்-தாது என்பது என் கருத்து.

உஞ்சேனை மாகாளம் என்ற சிவத்தலத்தைப் பற்றித் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், திருநாவுக்கரசு நாயனாரும் (கி. பி. ஏழாம் நூற்றாண்டு) தாம் பாடியுள்ள திருக்ஷேத்திரக் கோவைப் பதிகங்களில் குறிப்பிடுகின்றனர்.

"நெற் குன்றம், ஓத்தூர், நின்றநீர் மருகல்,
நெடுவாயில் குறும்பலா, நீடு திரு
நற்குன்றம் வலம்புரம், நாகேச்சுரம்,
நளிர்சோலை உஞ்சேனை மாகாளம் வாய்மூர்
கற்குன்றம் ஒன்றேந்தி மழை தடுத்து
கடல்வண்ணனும் மாமலரோனும் காணச்
சொற்கென்றும் தொலைவிலா தான் உறையும்
குடமூக்கென்று சொல்லிக் குலாவுமினே".

(திருஞானசம்பந்தர் தேவாரம், திருக்ஷேத்திரக் கோவை, பாடல் 8)

உஞ்சேனை மாகாளம், ஊறல், ஓத்தூர்
உருத்திரகோடி மறைக்காட்டுள்ளும்,
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை, வழுவூர்,
வீரட்டம், மாதானம், கேதாரத்தும்,
வெஞ்சமாக் கடல், மீயச்சூர், வைகா,
வேதீச்சுரம், விவீசுரம், வெற்றியூரும்,
கஞ்சனூர், கஞ்சாறு, பஞ்சாக்கையும்,
கயிலாய நாதனையே காணலாமே".

(திருநாவுக்கரசர் தேவாரம், திருக்ஷேத்திரக் கோவை, திருத்தாண்டகம், பாடல் 8)
இவ்விருநாயன்மார்களால் வணங்கப்படும் மேற்கூறிய சிவத்தலங்களுள், கேதாரம் ஒன்றைத் தவிர மற்றவை தமிழ் நாட்டிலிருப்பவை. கேதாரமென்ற திருக்கேதாரம் இமயமலைச் சாரலில் இருப்பது. இதனையும் வடநாட்டில் இமயமலைச் சாரலில் உள்ள இந்திரநிலபருப்பதம், அநேகதங்காபதம் முதலிய மற்ற சிவத்தலங்களையும் சம்பந்தரும், திருக்கேதாரத்தைச் சுந்தரரும் இங்கிருந்தே பாடி இருக்கின்றனர். அவர்கள் வடநாட்டுக்குச் செல்லவில்லை. அதனைப் போலவே, உச்சைனி மகாகாளம் என்ற உஞ்சேனை மாகாளத்தையும் அப்பரும், சம்பந்தரும், ஐயடிகளும் இங்கிருந்தே வணங்கித் தமது பாடல்களில் பாடியிருத்தல் கூடுமென்று கருதலாமாயினும், பெயர் அமைப்பில் உச்சைனி மாகாளம் என்பதற்கும், உஞ்சேனை மாகாளம் என்பதற்கும், இடையே காணப்படுகிற வேறுபாட்டினாலும், பின்வரும் காரணத்தினாலும், பேராசிரியர் மா. இராசமாணிக்கனார் கூறும் கருத்து சரி என்று கருத முடியவில்லை.

இராமநாதபுரம் மாவட்டத்தில், திருவாடானைத் தாலூகாவில் மேற்குப் பகுதியில், காரைக்குடிக்குத் தென்கிழக்கே ஏறக்குறைய ஆறு கல் தொலைவில் உஞ்சனை என்று வழங்கப்படும் ஒரு சிற்றூர் இருக்கிறது. அதன் ஊராட்சி மன்றப்பதிவேடுகளிலும், அரசாங்கப் பதிவேடுகளிலும் அது உஞ்சனை என்றே வழங்கப்படுகிறது. அவ்வூருக்குப் போக ஒரு கப்பிச் சாலையும், அங்கு ஓர் அஞ்சல் நிலையமும்

இருக்கின்றன. பெரிய ஊராக இல்லாவிடினும், அங்குப் பல கிராமங்களைச் சேர்ந்த குடும்பத்தார்களுடைய வழக்குகளைத் தீர்க்கும் நாட்டாண்மைப் பஞ்சாயத்து முறை இருந்து வருகிறது. அவ்வூரின் கிழக்கு ஓரத்தில் ஓர் ஊருணியும், அதன் மேற்குக் கரையில் கிழக்குப் பார்த்த ஒரு சிறு சிவன் கோயிலும், அதற்குத் தெற்கே தனியாக ஒரு சிறு பிள்ளையார் கோயிலும் இருக்கின்றன. இரண்டிலும் பழைய தமிழ்க் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கோயில் பழுதுபட்ட நிலையில் உளதாயினும், தினம் ஒரு வேளையாவது பூசை நடக்கிறது. பிரகாரத்தில் மூர்த்தங்கள் இல்லாத இரண்டு சிறு கோயில்கள் இருக்கின்றன. சிவன் கோயிலின் கருவறையில் வெளிப்புறக் கற்சுவரிலும், கோயிலினுள்ளே உள்ள கற்றூண்களிலும் கல்வெட்டிக்கள் காணப்படுகின்றன. தி,ன,ந,லூ,ர். முதலிய எழுத்துக்களை நான் படிக்க முடிந்தது. எல்லாவற்றையும் படிக்கும் பொருட்டு, அன்பர் அறிஞர் திரு. சா. கணேசன் அவர்களை ஒரு நாள் அழைத்து வந்து காட்டினேன். அவர்கள் பெருமுயற்சி செய்து கருவறையில் வெளிப்புறச் சுவரில் (வடபக்கம்) "உஞ்சேனை மாகாளமுடையார்" என்று தொடர் காணப்படுவதாகக் கூறினர்கள். இக்கல்வெட்டு முழுவதும் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினரால் படியெடுத்து ஆராயப்படுவதற்கு உரியதாகும். திருநாவுக்கரசர் தமது திருக்ஷேத்திரக் கோவையில் குறிப்பிடும் "வெற்றியூர்" என்ற சிவத்தலம் இதே மாவட்டத்தில் திருப்புத்தூர்த் தாலுகாவில் உள்ளது. எனவே, ஐயடிகள்காடவர்கோனும், சம்பந்தரும், அப்பரும் வணங்கிய சிவத்தலமாகிய உஞ்சேனை மாகாளமென்பது இந்த உஞ்சேனையாக இருத்தல் கூடுமென்பதும், அது வடநாட்டிலுள்ள உச்சைனி மகாகாளம் அன்று என்பதும் எனது ஊகங்களாகும். மாகாளம் என்ற பெயரை உடைய வேறு சிவத்தலங்களும் தமிழ் நாட்டிலுள்ளன. அம்பர் மாகாளம் என்ற சிவத்தலத்தையும் (பேரளத்துக் கருகிலுள்ளது), இரும்பை மாகாளம் என்ற சிவத்தலத்தையும் (திண்டிவனத்துக்கருகிலுள்ளது) சம்பந்தர் வணங்கிப் பாடியுள்ளார்.

குறிப்பு: மேற்படி எனது ஊகம் சரியா என்பது ஆராயப்படுதல் வேண்டும். இக்கோயிலின் கல்வெட்டு முழுதும் படியெடுக்கப்பட்டு, அதுவும், கோயிலும் ஆராயப்பட்டால், இக்கோயிலின் காலம் தெளிவாகத் தெரியக் கூடும். இக்கோயிலே ஐயடிகள்காடவர்கோனலும், திருஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் வணங்கப்பட்ட உஞ்சேனை மாகாளமென்பது உறுதிப்படுமானல், கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே இது மிகச் சிறிய அளவிலாயினும் இருந்திருத்தல் வேண்டுமென்பதும் உறுதியாகும்.

---

## வீரப்புகழ் பேசும் கிளி

தருமபுரி மாவட்டத்தில், தருமபுரி ஊராட்சி ஒன்றியத்திற்குட்பட்டதாக, தருமபுரியிலிருந்து மொரப்பூர் செல்லும் சாலையில் நடுப்பட்டி என்றொரு கிராமம் உள்ளது. இங்கு இறங்கினல் சாலையின் தெற்குப் புறமாகக் கோடியூரிலும், சாலையின் வடக்குப் புறமாகக் குன்னிசெட்டிபட்டி, தாசக்கவுண்டன்பட்டி ஆகிய ஊர்களின் வடக்குப் புறத்தேயும் நடுகற்கள் சில காணப்படுகின்றன. இவற்றில் சிலவற்றில் வீரனுக்கு இடப்புறமாகக் கிளியின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. இவற்றில் கல்வெட்டு வாசகம் இல்லை; இவை ஊராரால் வழிபடப்படவும் இல்லை. இதே போன்று செக்காரப்பட்டி என்ற கிராமத்தில் சாலை ஓரமாக உள்ள நடுகல்லிலும் இரட்டைகிளியும், பாம்பும் பொறிக்கப்பட்டுள்ளன. இதுகாறும் கிடைத்துள்ள நடுகற்களில் இது போன்று கிளியோ, பாம்போ காணப்படவில்லை. இவை எதைக் குறிக்கின்றன என்பது தெரியவில்லை. ஒரு கால் இறந்த வீரனின் ஆவி கிளி உருவிலோ, பாம்பு உருவிலோ சென்றது எனக் கருதினரோ ஏதோ அறியோம்.★

# கவி பாடும் கல்

திருமதி வி. விசயலக்ஷ்மி, எம்.ஏ.,
(அகழ்வாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை)

திருச்சி மாவட்டத்தில், திருவானைக்காவல் ஜம்புகேஸ்வரர் கோயிலில், நான்காம் திருச்சுற்று கிழக்குக் கோபுர வாயிலின், தென்புறச் சுவரின் மீது பாடல் வடிவில் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. கட்டளைக் கலித்துறையில் காட்சியளிக்கும் இக்கல்வெட்டை ஆய்வோம்.

கல்வெட்டு :

"மாவடிவங் கொண்ட மால்சென்று வேண்டவு மன்னொருவன்
மூவடி மானில மேமுன் கொடுத்தது. முத்தமிழ்நூற்
தூவடி வேற்வெய் சுந்தர பாண்டியன் சோழர்தங்கள்
பாவடி வைய்ய மகுடங் கொடுத்தது பாணனுக்கே".

பொருள் :

முன்னொரு காலத்தில் திருமால் வாமன[1] உருவில் வேண்ட, மகாபலி[2] மூன்று அடி நிலம் அளித்தான். முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் அடியில், சோழன் தன் மகுடத்தை வைக்க, அதனை அப்பாண்டியன் (திருமாலுக்கே மூவுலகத்தை யளித்த) மகாபலியின் வழியில் வந்த வாணனுக்குப் பரிசிலாக வழங்கினான் என்பது இக்கல்வெட்டின் பொதுக் கருத்தாகும். இனி இக்கருத்தின் ஆழ்ந்த பொருளை ஆய்வோம்.

அறிவாற்றலும், ஊக்கமும் உடைய மூன்றாங் குலோத்துங்க சோழன் கி. பி. 1178-ஆம் ஆண்டில்[3] சோழ இராச்சியத்திற்குச் சக்கரவர்த்தியாக முடி சூட்டப் பெற்றான். இவன் தெற்கே பெற்ற வெற்றிகளை இவன் சாசனங்களைக் கொண்டு பல தொடர்களில் முதலில் குறித்துக் கூறுகின்றார் திரு. வி. ரா. இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள்.[4]

உதாரணமாக,

1 " மதுரை கொண்டருளின"
2 " மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின"
3 " மதுரையும் ஈழமுங் கொண்டு பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின"
4 " மதுரையும் ஈழமுங் கருவூருங் கொண்டு பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின"
5 " மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கச்சியுங் கருவூருங் கொண்டருளின"
6 " மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளிக் காஞ்சியும் வஞ்சியும் கொண்டருளி வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளின"
(புதுக்கோ. சாசனம். 164)

இவ்வாறு அறுவகையான தொடர்கள் அமைந்துள்ளதைக் காணலாம். மேற்காட்டிய தொடர்களிலிருந்து குலோத்துங்கன் நடத்திய பெரும்போர்கள் ஆறு என்பது பெறப்படும்.

"பாண்டியனைப் பாண்டியனென்னும்பேர் மாறிவர
நெடும்படைத் தென்னவர்கெட மதுரை கொண்டதோள் வலிபாடிய
பாணனைப் பாண்டியனென்று பருமணிப் பட்டஞ்சூட்டி"என்

என்று இவன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது. பாண்டியனைப் பேர் மாற்றிப் பாணனுக்குப் பட்டஞ் சூட்டிய இச்செயலை, தன் குறுநில மன்னனை வாணகோ வரையனைக்கொண்டு இவ்வரசன் நடத்தினன் என்று தெரிய வருகிறது. இதற்குச் சான்றாக, பாண்புலவன் ஒருவன் கடைவாயிற்சுதவை வாணகோவரையன் தட்டிய போது,

"பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணற் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை யறியேனே - மூண்டெழுந்த
கார்மாற் றுஞ் செங்கைக் கடகரிவா ணுவென து
பேர்மாற் றுவதரிதோ பேசு"

என்று கூறி அவ்வாணகோவரையனை மகிழ்வித்தான் என்று பெருந்தொகையில் (1188) உள்ள பாடலொன்று சான்று பகர்கின்றது.

இப்பாணனை ஆறகளூருடைய மகதேசன் ராஜராஜதேவன் பொன்பரப்பினான் வாணகோவரையன் என்றழைப்பர்.

இதற்குச் சான்றாக, திருச்சி மாவட்டத்திலுள்ள ஜம்புகேஸ்வரர் கோயிலின், நான்காம் திருச்சுற்று கிழக்குக் கோபுர நுழைவாயிலின், வடக்குப்புற சுவரில் மூன்றாங் குலோத்துங்கனின் 18-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டின் பெரும்பகுதி சிதைந்துள்ளது. இக்கல்வெட்டைக் காண்போம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ : திரிபுவனச் சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சொழ தெவற்கு யாண்
டு 18ஆவது ஆறகளூருடைய இராசராச தெவ
ன் பொன்பரப்பினன் வாணகொவரைய
நென் சியன் உடைய பிள்ளையான அகளங்
க நாடாழ்வாற்கு நிலைமைத் திட்டுக்கு(டுத்த)
(பரிசா)வது எனக்கும் இராச ெ(கம்பீ)
ர மகதை நாடாழ்வாற்கும் . . . . . . . .
(கா)லமும் பிழையா தெ . . . . . . . (கா)
ரியஞ் செய்யினும் வினையுஞ் செய்
யினும் சொன்னபடியே செய்ய(க்க)
டவராகவும் இங்கிட்டு இவர் . . . . . . .
(ர) பக்கல் ஆள் ஓலை பெறக்(காட்டுதல்) . . . (2)
றவு பண்ணுதல் செய்யக்கடவோ மல்லவ
ாகவும் இவர்கள் பாடுகின்ற . . . . . . ஓலை
(ப)ந்தன்வுண்டாகில் இவர்களை அழைத்து
காணுதல் ஓலைகேட்டல் செய்யாதெ மக

ஞரை அறிவிக்க கடவதாகவும், இவர்க்கு ஒ
ருவினை உண்டாகில் படையுங் குதிரையும் பு
கவிட்டு என் வினையாக ஏறிட்டுக்கொண்டு
நோக்க கடவெனுகவும் நம்மில் நாடு நிற்
கும் இடத்து முன்பு நிலைமை செய்து பதி
நெழாவது வரையும் அனுபவித்து வரு(கி)
(ன்)ற படியெ பதினெட்டாவது முதல்
அனுபவிக்க கடவொமாகவும் . . . . .
. . . . . . . . . . . . .
. . . . . . . வாண கொவரயனை
. . . . செம்பீர மக(தை).

குலோத்துங்கனது இம்மதுராவிஜயம், பாண்டியருடன் மூன்றும் முறை பொருது பெற்றதாகும்.[5] இக்குலோத்துங்கனது ஆட்சியின் 40-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் கைச்சினம், ஊட்டத்தூர், திருவரன்குளம் ஆகிய ஊர்களில்[6] காணப்படுதலால், இவன் நாற்பது ஆண்டுகள் ஆட்சி புரிந்திருத்தல் வேண்டும். எனவே இவன் கி. பி. 1218-ல் இறைவன் திருவடியை எய்தியிருத்தல் வேண்டும். இவன் தான் இறப்பதற்கு இரண்டாண்டுகட்கு முன்னர் கி. பி. 1216-ஆம் ஆண்டில் தன் புதல்வனை மூன்றும் இராசராசனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட, அதேயாண்டில் முதல் மாறவர்மன்சுந்தரபாண்டியனும் முடி சூட்டப்பெற்று, சோழ நாட்டின் மேல் படையெடுத்துத் தன் உள்ளத்தில் உருத்திக் கொண்டிருந்த வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டான்.

தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்திக்
காவியு நீலமும் நின்று கவினிழப்ப
வாவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிலுங் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையும் மண்டபமும் பலவிடித்துத்
தொழுதுவந் தடையா நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணீ ராறு பரப்பிக்
கழுதைகொண் டுழுது கவடி வித்திச்
செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபறித்துப் பாணருக்குக் கொடுத்தருளிப்
பாடருஞ் சிறப்பிற் பருதி வான்றோய்
ஆடகப் புரிசை ஆயிரத் தளியிற்
சோழ வளவன் அபிஷேக மண்டபத்து
வீராபி ஷேகஞ் செய்து புகழ்விரித்து "[7]

என்ற இம்மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தியினல், இவ்வேந்தன் படையெடுப்பில் சோணுடு எத்தகைய அழிவிற்குள்ளாயிற்று என்பதையும், வீராபிடேகஞ் செய்து கொண்டதையும் நன்கறியலாம்.

செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபறித்துப் பாணருக்குக் கொடுத்தருளி

என்ற இம்மெய்க்கீர்த்தியடிகள்,

. . . . . . சுந்தர பாண்டியன் சோழர்தங்கள்
பாவடி வைய்ய மகுடங் கொடுத்தது பாணனுக்கே

என்ற இக்கல்வெட்டு அடிகளுக்குப் பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம். சுந்தர பாண்டியனது மூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள், அவனைச் 'சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியதேவர்' [8] எனவும் 'சோணாடு வழங்கியருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்' [9] எனவும் கூறுவதால், இவன் சோணாட்டைக் கைப்பற்றி, பிறகு அந்நாட்டை அச்சோழனுக்குத் திருப்பி அளிக்கும்போது, அதில் ஒரு பகுதியைப் பிரித்துத் தனக்குப் பலவகையில் உதவி புரிந்த மகதையர் கோனாகிய வாணாதிராயனுக்கு வழங்கியிருத்தல் வேண்டும்.

சேலம் மாவட்டத்திலுள்ள ஆறகழூரைத் தலைநகராகக் கொண்டு மகத நாட்டை அரசாண்டமையாலும், திருவண்ணாமலைக் கோயிலைப் பொன் வேய்ந்தமையாலும், 'பொன் பரப்பினான் மகதைப் பெருமாளான இராசராச வாணகோவரையன் என்று வழங்கப்பெற்றான். [10] திருவண்ணாமலைக் கோயில் சுவர்களில் வாணனுடைய அறச்செயல்களையும், வீரச்செயல்களையும் கூறும் பாடல்களைக் காணலாம். [11] இவன் மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்தான். [12] குலோத்துங்கனின் ஆட்சியின் பிற்பகுதியில் வாழ்ந்த வாணர் இருவர் இவனோடு பகைமை கொள்ளத் தொடங்கி விட்டார்கள் என்பதைத் திருவண்ணாமலையிலுள்ள ஒரு கல்வெட்டால் [13] அறிகிறோம்.

ஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்திகள் (ம)திரையும் (ஈ)ழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளின ஸ்ரீகுலோத்துங்கசொழ தெவற்கு யாண்டு உ௰எ-வது பாண்டிநாடு கொண்டானான சம்புவராயனும் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . , .
. . . . . . . , . . . . . . . . . மகதை நாடாழ்வானான வாணகொவரையனும் குலோத்துங்கசொழ வாணகொவரையனும் பக்கல் ஆளாதல் ஓலையாதல் பொகக்காட்டுதல் உறவு பண்ணுதல் அறுதிசெய்தல் செய்யக்கடவொ மல்லாதொமாகவும் . . . . . . . . . . , , .
என்று பல செய்திகள் விளக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால், மகதை நாடாழ்வானான வாணகோவரையன், முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியனோடு மிகுந்த நட்பு கொண்டு, இருவரும் சேர்ந்தே மூன்றாங் குலோத்துங்கனோடு போரிட்டுச் சோணாட்டுப் பகுதியை வெற்றி கொள்ள, அச்சுந்தரபாண்டியன் தனக்குப் பலவகையில் உதவிபுரிந்த வாணகோவரையனுக்கு நன்றிக்கடனாக அச்சோணாட்டின் ஒரு பகுதியை அளித்திருத்தல் கூடும் [14] என்பது பெறப்படுகிறது.

---

1. கலைக்களஞ்சியம் - தொகுதி ஒன்பது - பக்கம் 209
2. Journal of Indian History-The Banas in South Indian History, By, Shri. T V. Mahalingam. Page 155.
3. Ep. Ind., Vol VIII, Page 260.
4. மூன்றாங் குலோத்துங்கசோழன் திரு. வி. ரா. இராமசந்திர தீக்ஷதர் பக்கம் 35-36.
5. மூன்றாங் குலோத்துங்கசோழன் திரு. வி. ரா. இராமச்சந்திர தீக்ஷதர் பக்கம் 50-51
6. Inscriptions of the Pudukkottai State, No : 176
7. S. I. I. Vol IV, No: 372.
8. Inscriptions of the Pudukkottai State, No: 249.
9. Inscriptions of the Pudukkottai State No: 296.
10. S. I. I. Vol. VIII, No: 148.
11. S.I.I. Vol. VIII No: 145.
12. Journal of Oriental Research Page 311
13. S. I. I., Vol. VIII, No: 106.

# புதிய செய்திகள்

## கைத்தலைப் பூசல் நங்கை :

தஞ்சைக்கருகில் வல்லம் என்ற ஊரிலிருந்து 3·5 கி.மீ. தொலைவில் காளி கோயில் ஒன்று உள்ளது. அதை ஏகௌரி அம்மன் என்று அழைக்கிறார்கள். மிகவும் சக்தி வாய்ந்த தெய்வமாக அதை வல்லத்து ஊரார் வணங்குகிறார்கள். கோயில் அண்மையில் முழுமையும் புதுப்பிக்கப்பட்டுள்ளது. காளியின் சிலை சுதையால் செய்யப்பட்டு, வண்ணம் பூசப்பட்டுள்ளது. இங்கு இரண்டு கல்வெட்டுக்களைத் தமிழ்நாடு அரசு தொல்பொருளாய்வுத்துறை படியெடுத்துள்ளது. உள்மண்டபத்து ஒரு தூணிலும், மண்டப நுழைவாயில் நிலையிலும், இக்கல்வெட்டுக்கள் உள்ளன. நுழைவாயிலின் மறுநிலையிலும் ஒரு கல்வெட்டு இருந்திருக்கிறது. அது தற்போது முழுமையும் சிதைந்து விட்டது. நுழைவாயில் நிலையில் உள்ள கல்வெட்டு, பராந்தகசோழன் காலத்தது. அக்கல்வெட்டு, வரலாற்றுக்குப் புதிய செய்தியை அளிக்கிறது. பராந்தகசோழனின் 40-வது ஆண்டில், பராந்தக முத்தரையன் என்பவன், வல்லத்துப் பட்டாரகிக்கு [பிடாரி] எரிக்க ஒரு நந்தாவிளக்கு வைத்தான். இவனது இயற்பெயர் அனந்தன்காரி என்பதாகும். இவன் எரியூர் நாட்டு வடகுளத்து துறப்பாடி என்னும் ஊர்த்தலைவன் என்று அறிகிறோம். நார்த்தாமலைக் கல்வெட்டில், மல்வன் அனந்தன் என்று ஒருவன் குறிக்கப்படுகிறான். இவன், அனந்தன் காரி என்று அழைக்கப்படுவதால் அவ்வனந்தனின் மகனாக இருக்கலாம். இவன் நந்தா விளக்கெரிப்பதற்குத் தொண்ணூற்றாறு ஆடுகளைக் கொடுத்திருக்கிறான். ஆடுகளைப் பெற்றுக் கொண்டவன், 'குவாவன் பிரமன்' என்பவன் ஆவான்.

முத்தரையர்கள், காளியின் அடியார்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள். நியமத்து மகாகாளத்து பிடாரி கோயிலைத் தோற்றுவித்தவன் சுவரன் மாறன் ஆகிய பெரும்பிடுகு முத்தரையன் என்பவன். (செந்தலைக் கல்வெட்டு) இங்கு வல்லத்துப் பட்டாரகிக்கு விளக்கெரிக்கக் கொடுத்தவனும் முத்தரையன் ஆவான்.

வல்லம் முத்தரையர்களின் ஒரு தலைநகரமாகத் திகழ்ந்தது என்றும் நாம் அறிவோம். ஆதலின் இக்காளிகோயில் மிகவும் தொன்று தொட்டே சிறப்புப் பெற்றிருந்தது என்பது தெளிவு. பராந்தகன் கால இக்கல்வெட்டின் முழு வாசகமும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

இராஜராஜனுடைய கல்வெட்டில் இப்பிடாரியின் பெயர் கொடுக்கப்பட்டு உள்ளது. 'வல்லத்து மகாகாளத்து கைத்தலைப் பூசல் நங்கை' என்று உள்ள அப்பெயர், அக்கோயிலைப் பற்றிய சில செய்திகளை எடுத்துரைப்பதாக உள்ளது. இக்கோயில் மகாகாளம் என்று அழைக்கப்பட்டது என்று அறிகிறோம். காளியின் கையில் தலையொன்று இருந்தது என்று 'கைத்தலைப் பூசல் நங்கை' என்னும் தொடர் மூலம் அறியலாம். காளி போரின் தெய்வம். அவளைக் கல்வெட்டு 'பூசல் நங்கை' என்று குறிப்பது சிறப்புடைத்தாய் உள்ளது. இவ்வுருவம், அக்காலத்தில் முழுமையும் சுதையால் செய்யப்பட்டிருந்ததா அல்லது கல்லால் செய்யப்பட்டி இருந்ததா என்பது தெரியவில்லை. இப்பொழுது உள்ள உருவம், சுதையால் செய்யப் பட்டு உள்ளது. எட்டுக் கரங்களை உடைய இத்தேவியின் எந்தக் கரத்திலும் இப்போது தலை இல்லை. ஏகௌரி என்று இப்பொழுது அழைக்கப்படும் பெயர், 'ஏகவீரி' (நிகரற்ற வீரத்தை உடையவள்) என்பதன் திரிபாக இருக்கலாம்.

**கல்வெட்டு வாசகம் :**

1 ஸ்வஸ்தி ஸ்ரீ மதி
2 ரையும் ஈழமு
3 ங் கொண்ட
4 கோப்பரகேசரி பன்ம
5 ர்கியாண்டு ௩௰ ஆவது
6 எரியூர் நாட்டு வடகுள
7 த் துறுப்பாடித் துறுப்
8 பாடி உடையான் அனந்
9 தங்காரியாகிய பிராந்தக
10 முத்தரையன் வல்லத்து
11 ஸஹாரகிக்கு வைச்ச நொ
12 ந்தா விளக்கொன்று ஒன்று
13 க்கும் இஞ்ஞாட்டுப் பாட்ட
14 த்தானன் குவாவம் பிர
15 மனுக் கி[று]த்த ஆடு தொ
16 ண்ணூற்றுறுங் கொண்
17 டு சந்திராதித்தவல
18 மும் நிசதம் உழக்கு
19 நெய்யட்டுவேனனே
20 ன் குவாவம் பிரமனெ
21 ன் இவை
22 பன்மாஹேஸ்வரரிர
23 க்ஷை

---

## அதியமான் பெருவழி :

தருமபுரிக்கு மேற்கே மூன்று கல் தொலேவில் இரு சாலேகள் கூடும் இடமருகே யுள்ள பனங்காட்டில், தற்போது கிடைத்துள்ள கி.பி. 13-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த கல்வெட்டு ஒரு புதிய செய்தியைத் தந்துள்ளது.

கல்வெட்டு : அதியமான் பெருவழி

நாவற் தாவளத்துக்குக் காதம் ௨௰௯

தருமபுரி மாவட்டம் காடுகளும் குன்றுகளும் நிறைந்த பகுதி ஊர்களும் ஒன்றுக்கொன்று வெகுதொலேவில் உள்ளன. செல்லும் வழியும், அடுத்த ஊருக்குள்ள தொலேவும் கல்லில் பொறித்து வழிக்கல்லாகச் சுமார் 600 ஆண்டுகளுக்கு முன்னரே வைத்துள்ளது, வியப்பாக உள்ளது இந்த வழிக்கல்லில் எழுத்துக்களின் கீழே துளேகள் இடப்பட்டுள்ளன. மேலே இரு பெரிய துளேகளும், கீழே ஒன்பது

சிறிய துளைகளும் உள்ளன. இவை 29 என்னும் எண்ணைக் குறிப்பதற்காக இடப் பட்டவை போலத் தோன்றுகிறது. பண்டைத் தமிழகத்தில் சாலையின் பெயரையும் தொலைவையும் குறித்து வைக்கும் பழக்கம் இருந்திருக்கிறது. பண்டையத் தமிழக போக்குவரத்து வரலாற்றிற்கு இது ஒரு புதிய ஒளி.

### தஞ்சை மாவட்டத்தில் கற்கருவிகள் :

தஞ்சை மாவட்டம் பூதலூரில், ஆனந்தக் காவிரி ஆற்றங்கரையில், கற்காலக் கருவிகளை, தமிழ் நாடு அரசு தொல்பொருளாய்வுத்துறை கண்டுபிடித்துள்ளது. கறுப்புக் கல்லில் உள்ள இக்கருவிகள் மிகவும் சிறியவை. சிறு தகடுகள், சுரண்டிகள் இவற்றைப் பெயர்த்தெடுத்த வேர்க்கற்கள் ஆகியவை உள்ளன.

தஞ்சை மாவட்டத்தில் இதுபோன்ற கற்கருவிகள் கண்டுபிடிப்பது இதுவே முதல் தடவை ஆகும். இவை சற்றேறக்குறைய 5000 ஆண்டுகட்கு முற்பட்டவை யாக இருக்கக்கூடும். இதுபோன்ற சிறு கற்கருவிகள், திருநெல்வேலி மாவட்டத்தில் சாயர்புரம் என்ற ஊருக்கு அருகில் 'தேரி' என்ற மணல் மேடுகளில் முன்னரே கிடைத்துள்ளன. தமிழகத்தில் நுண்கற்கருவிகளைப் பயன்படுத்திய மனிதர்கள், நெல்லைமாவட்டத்து, தாமிரபரணி ஆற்றங்கரையில் வாழ்ந்தார்கள் என்பது நமக்கு முன்னரே தெரியும். ஆனல், காவிரி சூழ் தஞ்சை மாவட்டத்திலும் அக்காலத்திலேயே நுண்ணிய கற்கருவிகளைப் பயன்படுத்திய மனிதன் வாழ்ந்திருக்கிறான் என்பதற்குச் சான்று கிடைத்துள்ளது இதுவே முதல் தடவை.

---

## பா

பா———பரப்பு, தேர்த்தட்டு, பாம்பு, கைமரம், பாட்டு, நெசவுப்பா, நிழல், கடிகார ஊசி, காப்பு, பருகுகை, தூய்மை, அழகு.

மேற்கண்ட பொருள்கள், தமிழ்லெக்ஸிகனில் குறிக்கப்பட்டுள்ளன. கலிங்கத்துப் பரணியில் 'பா' என்ற சொல் கைமரம் என்ற பொருளில் வழங்கப்பெற்று உள்ளது.

கழித ழிந்துபோர் மிதிலை யிற்படும்
கரிம ருப்பினைத் திரள்து லாமெனும்
படிய ரப்பிஅப் பரும யானையின்
பழுள லும்பினில் பாஅ டுக்கியே

2000 ஆண்டுகட்கு முந்திய கல்வெட்டு ஒன்றிலும் 'பா' என்ற சொல் கை மரம் என்ற பொருளில் வந்துள்ளது. ஆனைமலைக் கல்வெட்டில் 'பா' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'இவ குன்றத்து உறையுள் பா தந்தான்' என்று அதை இத்துறை படித்து உள்ளது. கற்படுக்கை கொடுத்ததை இது குறிக்குமெனப் பொருள் கொண்டுள்ளோம். குன்றில் சமணப் பெரியார்களுக்குப் படுக்கை அமைத்து மழைநீர் உள்ளே வழியாமல் இருக்கக் கூரை அமைத்துக் கொடுத்துள்ளார்கள். கைமரம் பொருத்திக் கூரை அமைத்தனர் போலும். இவ்வமைப்பினைப் பா என்று குறிப்பிட்டனர். எனவே 'பா' என்ற சொல் 2000 ஆண்டுகட்கு முன்பேயே இதே பொருளில் வழங்கி வந்தமை தெளிவு.